உ

கணபதி துணை.

# இந்து தர்மகர்த்தா

# HINDU TRUSTEE





இது

திருவாரூர் டி. மு. கோர்ட்டு பிளீடரும், தஞ்சை இந்து
தர்மபரிபாலனமகாஜனசபை செக்ரிடரியுமான

A. நடேசபிள்ளை அவர்களால்

இயற்றப்பட்டு



ஆணிக்காரன்சத்திரம்
விக்டோரியா பாண்டியன் அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டது.

விலை அணா 4.








1904

உ

# முகவுரை.

——(0)——

இந்துக்களால் ஏற்படுத்தப்பட்டிருக்கிற தேவாலயங்கள், மடங்கள், சத்திரங்கள் முதலான பொதுதருமசொத்துக்களை பரிபலிக்க ஏற்பட்டிருக்கும் தர்மகர்த்தாக்களில் சிலர் தங்களுக்குள்ள பாத்தியங்கள் இன்னதென்பதை தெரிந்துகொள்ளாமல் ஏற்பட்ட தருமங்களை சரிவர நடத்தாமலும் தகாத காரியங்களில் தருமசொத்துக்களை உபயோகப்படுத்தியும் வருவதால், அவர்களால் அபகரிக்கப்பட்ட அல்லது நஷ்டமேற்படுத்தப்பட்ட சொத்துகளை அவர்களிடம் வசூலிக்கவேண்டியதும், அவர்களை நீக்கி தக்க யோக்கியதையுள்ளவர்களை நியமித்து தருமங்கள் சரிவரநடத்திவரச் செய்யவேண்டியதும் தர்மசிந்தையும் தெய்வபக்தியுமுள்ள இந்துக்கள் யாவருக்கும் முக்கியகடமை.

தர்ம சொத்துகள் விஷயமாய் கவர்ண்மெண்டாரால் ஏற்படுத்தப்பட்டிருக்கிற 1863 ௵த்திய 20 வது ஆக்ட்டில் சொல்லப்பட்டிருக்கும் விஷயங்கள் மிகவும் சொற்பமாயிருப்பதால் தர்மகர்த்தாக்கள் பலவிதமாய் சொத்துகளை அபகரிக்க இடமாயிருக்கிறதென்றும், ஆகையால் அச்சட்டத்தை சீர்திருத்தம் செய்யவேண்டுமென்றும் பலர் வீண்வாதங்கள் பேசிக் காலத்தை கழித்துவருகிறார்களேயன்றி ஷை ஆக்ட்டு சம்பந்தமாய் பல ஹைகோர்ட்டுகளிலும் ஏற்பட்டிருக்கிற ரூலிங்ஸ்களைபார்வையிட்டு ஆக்டைத்திருத்த ஒருவரும் முன்வரவில்லை. அநேகருக்கு அவ்வித ரூலிங்ஸ் ஏற்பட்டிருக்கிறதும் தெரிந்திராது.

ஆகையால் அவைகளை தர்ம சிந்தையும் தெய்வபக்தியுமுள்ள யாவர்களும் உணர்ந்து தருமங்கள் சரியாய் நடக்கும்படி வேண்டிய ஏற்பாடுகள் செய்யும்பொருட்டும், தர்மகர்த்தாக்கள் தங்கள் கடமை இன்னதென்றும் தர்மசொத்துகளில் தங்களுக்குள்ள பாத்தியம் இன்னதென்றும் தெரிந்து தருமங்களை சரிவர பரிபாலித்துவரும்பொருட்டும், தனவான்கள் தருமசொத்துகளில் தருமகர்த்தாக்களுக்குள்ள பாத்தியம் இன்னதென்று தெரிந்துகொள்ளாமல் அவர்களுடைய தகாத செலவுகளுக்கு கடன் கொடுத்தும், தருமசொத்துகளை கிரயம் முதலானவைகள் பெற்றும் நஷ்டமடையாமலிருக்கும்பொருட்டும், இதுவரையிலும் சென்னை பம்பாய், அலகாபாத், கல்கத்தாமுதலிய ஹைகோர்ட்டுகளில ஏற்பட்டிருக்கும் தீர்மானங்களையெல்லாம் சுருக்கி தமிழில் இப்புத்தகமூலமாய் வெளியிடலானேன்.

திருவாரூர்
1—2—04

A. நடேசபிள்ளை.

உ

விநாயகர் துணை





# இந்து தர்ம கர்த்தா.

## இந்துக்களும் பூர்வீக தர்மங்களும்.

(1) இந்துக்கள் பெரும்பாலும் முற்காலத்தில் தெய்வபக்தியும் தருமசிந்தனையு முடையவர்களாயிருந்து வந்ததினால் அவர்கள் ஆகாராதிகளுக்கு சிலவழிந்ததுபோக மற்றபொருள்களை தாமங்கள் செய்வதிலேயே சிலவழித்து வந்ததாகவும் இந்துமத அரசர்களும் அவ்வாறே மிகுந்த தருமங்கள் நடத்திவந்ததாகவும் நாம் இக்காலத்தில் நேரில் பார்க்கும் பெரியகோவில்கள் சத்திரங்கள் முதலியவைகளினாலும் அவைகளின் தருமங்கள் எக்காலத்திலும் சரிவர நடந்துவருவதற்காக ஏற்பட்டிருக்கிற ஏராளமான பூஸ்திதிகளினாலும் நன்றாய் தெரிகிறது.

## 1817-ம் வருஷத்திய 7-வது ரெகுலேஷன்.

2. இந்தியாவை மகம்மதிய அரசர்கள் அரசாண்டகாலத்தில் இந்துக்கள் தங்கள் மதக்கொள்கைகளை மறந்துவிட நேர்ந்து தர்மகர்த்தாவாக இருந்தவர்கள் மாமூலாக ஏற்பட்ட தருமங்களை சரிவரச்செய்யாமல் தருமங்கள் ஏற்படுத்தியவர்களின் கருத்துகளுக்கு விரோதமாக நடத்திவந்ததாக இங்கிலீஷ் கவர்ண்மெண்டாருக்குத்தெரியவந்ததின்பேரில் அத்தருமங்கள் மாமூல்பிரகாரம் கிரமப்படி நடந்துவரச் செய்யவேண்டியதினிமித்தம் கவர்ண்மெண்டார் 1817ம் ஷூத்திய 7-வது ரெகுலேஷன் என்ற ஓர் சட்டம் ஏற்படுத்தினார்கள்.

## ரெவினியுபோர்டாரவர்களும் தர்மவிசாரணையும்.

3. மேற்கண்ட சட்டத்தின்படி இந்து தேவாலயங்கள், சத்திரங்கள், பள்ளிக்கூடங்கள், பாலங்கள் முதலிய பொது தர்மசொத்துக்களுக்கு ஏற்பட்டிருந்த பூஸ்திதி முதலியவைகளை ரெவினியு போர்டாரவர்கள் கைக்கொண்டு எந்தெந்த தருமங்கள் எந்தெந்த விதம் நடத்தப்படவேண்டியதாக திட்டங்கள் ஏற்பட்டதோ அந்த கிரமப்படி தருமங்கள் நடந்துவர தகுந்த ஏற்பாடுகள் செய்தார்கள்.

4. ரெவினியூ போர்டாரவர்கள் பிரதிஜில்லாவிலும் அனேக ஏஜண்டுகள் நியமித்து பொது தர்மங்கள் சரிவர நடத்தப்படவில்லை யென்று தெரிகிற தர்ம சொத்துக்களுக்கு ஏற்பட்ட தர்மகர்த்தாக்களின் பெயர் முதலிய விபரங்கள், தர்ம சொத்துக்களின் நிலமை, அவைகளின் வரும்படிகள், சிலவுகள், தர்மகர்த்தாக்களின் ஸ்தானங்கள் காலியானால் அவ்வேலைக்கு அருகமுள்ள நபர்களின் பெயர், யோக்கியதை முதலிய அனேக விஷயங்களைப்பற்றி தங்களுக்கு தெரிவித்துவர உத்திரவு செய்தார்கள்.

5. மேற்சொன்ன தர்மங்களெல்லாம் ரெவினியூ போர்டாரவர்களுடைய விசாரணைக்குள்ப்பட்டு சென்ற 1863 ம்ஞுவரையில் சரிவர நடந்துவந்தது.

---

## ரெவினியூ போர்டாரவர்களை தர்மவிசாரணை யினின்றும் விலக்கல்.

### 1863ம் வருஷத்திய 20-வது ஆக்ட்டு.

6. இந்த தேவாலயங்கள் மசூதிகள் இவைகளின் தர்மவிசாரணை பாத்தியதைகளினின்றும் ரெவனியூ போர்டாரவர்கள், அவர்களால் நியமிக்கப்பட்டிருந்த லோகல் ஏஜண்டுகள், இவர்களை விலக்கவேண்டியதினிமித்தம் 1863ம் ஞுத்திய 20-வது ஆக்ட்டு ஏற்படுத்தப்பட்டது.

7. அந்தச்சட்டப்படி தர்மகர்த்தாக்கள் இரண்டு வகுப்பினர்களாக பிரிக்கப்பட்டார்கள்.

(1) கவர்ன்மெண்டார் அல்லது கவர்ண்மெண்டு உத்தியோகஸ்தர்களால் நியமிக்கப்பட்ட தர்மகர்த்தாக்கள்.

(2) மேற்கண்டவர்களால் நியமிக்கப்படாத வம்சபரம்பரையான பாத்தியதைகளையுடைய தருமகர்த்தாக்கள்.

---

## தேவஸ்தானகமிட்டி மெம்பர்கள்.

8. ரெவனியூபோர்ட்டாரவர்களுக்கும் லோக்கல் ஏஜண்டுகளுக்கும் உள்ளபாத்தியங்கள் "தேவஸ்தானகமிட்டி மெம்பர்கள்" என்றசபையார் ஏற்படுத்தப்பட்டு அவர்களுக்கு கொடுபெட்டன.

9. ஒவ்வொரு ஜில்லாவிலுள்ள தேவாலயங்களின் சங்கைகளுக்கும் வரும்படிகளுக்கும் தக்கபடி ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட டிவிஷன் கமிட்டிகளும் அவைகள் ஒவ்வொன்றிற்கும் மூன்று அல்லது அதற்கு மேற்பட்டமெம்பர்களும் நியமிக்கப்பட்டார்கள்.

---

## கமிட்டி மெம்பர்களின் நியமனம்.

10. கமிட்டிமெம்பர்கள் எந்ததேவஸ்தானங்களின் மேல்விசாரணைக்கு நியமிக்கப்படுகிறார்களோ அத்தேவாலய விஷயங்களில் அக்கரையுள்ளவர்களின் சம்மதத்தின்படி அவர்கள் நியமிக்கப்படவேண்டும். அதாவது ஒட்டர்கள் (சம்மதிகொடுப்பவர்கள்) என்ற பக்தர்கள் கூடி கமிட்டிமெம்பர்கள் வேலைக்கு அருகமுள்ளவர்களைத் தேர்ந்தெடுக்கவேண்டும்.

11. ஒட்டர்களின் ஜாப்தா எடுத்தல் கம்மிட்டி மெம்பர்களின் நியமனம் முதலிய நடவடிக்கை நடத்தவேண்டியதற்காக அடியில் கண்டபடி ரெவனியூ போர்டாரவர்களால் 77-வது ஸ்டாண்டிங்கார்டர் (நிலையானஉத்திரவு) ஏற்பட்டிருக்கிறது.

I. தேவஸ்தானகமிட்டிமெம்பர் ஸ்தானம் காலியானவுடனே அக்காலி விபரங்களை ஜில்லா கெஜட்டில் பிரசுரஞ்செய்யவேண்டியதன்றி அந்த கமிட்டிக்குள்பட்ட எல்லா தேவஸ்தானங்களிலும் பயிரங்கமான இடங்களில் கமிட்டி மெம்பர் காலியான விபரங்கள் கண்ட நோட்டீஸ்கள் ஒட்டியும் விளம்பரஞ்செய்யவேண்டும்.

II. யாருக்காக பிரதி நியமிக்கப்படவேண்டியதோ அந்த நபரின் பெயர், காலியான தேதி, அக்காலிவேலைக்கு பிரதி நபர் தேர்ந்தெடுக்க குறிப்பிட்ட இடம், தினம், மணி, இவ்விஷயங்கள் விளம்பரங்களில் கண்டெழுதப்படவேண்டும்.

III. அவ்விதந்தேர்ந்தெடுக்கக் குறிப்பிட்ட இடமானது காலிவேலையுள்ள ஜில்லா அல்லது தாலூகாவின் பிரதான பட்டணத்தில் கமிட்டி விசாரணைக்குள்பட்ட பெரிய தேவஸ்தானமாக இருக்கவேண்டும்.

IV. அந்த தேதியானது எலெக்ஷனுக்கு (தேர்ந்தெடுப்பதற்கு) ஒரு மாதத்திற்கு மேற்பட்டும் கமிட்டி மெம்பர்ஸ்தானம் காலியாகி மூன்று மாதங்களுக்கு மேற்படாமலுமிருக்கவேண்டும். இதன் மத்தியகாலத்தில் ஷெ தேவஸ்தானம்கமிட்டியார் எல்லைக்குட்பட்டவிடங்களில் வசிப்பவரும் அடியில் கண்ட 13-வது ரூல்படி கமிட்டி மெம்பர்களை தேர்ந்தெடுத்து நியமனஞ்செய்ய அந்தஸ்துள்ள ஒட்டர்கள் (சம்மதி சீட்டு கொடுப்பவர்கள்) சபை கூடி புதுமெம்பர்கள் நியமனத்துக்கு சம்மதி கொடுக்கத்தக்கதாக போதுமான சாவகாசமிருத்தல் வேண்டும்.

V. அவ்விதம் தேர்ந்தெடுப்பவர்களின் சம்மதிகளை தெரிந்து பதிவு செய்துகொள்வதற்காக தக்க யோக்கியதையும் நம்பிக்கையுமுள்ள போதுமான அநேகர்களை டெல்லர்களாக (அறிவிப்பவர்களாக) மற்ற கமிட்டி மெம்பர்கள் நியமிக்கக் கடமைப்பட்டவர்கள். அவர்கள் காலி கமிட்டிமெம்பர் வேலையை நாடியவராகவாவது அல்லது அவருக்குள்பட்ட சிப்பந்தியாகவாவது இருக்கக்கூடாது.

VI. மெம்பர்கள் தேர்ந்தெடுக்க குறிப்பிட்டதினத்தில் காலை 6 மணிக்கு ஒட்டுகள் எடுக்க ஆரம்பித்து மாலை 6-மணிக்குள் முடித்துவிடவேண்டும்.

VII. குறிப்பிட்ட காலங்களுக்குள் எலெக்ட்ர்கள் (சம்மதி கொடுப்பவர்கள்) எல்லோரும் அவர்கள் சம்மதிகளை பதிவுசெய்ய போதுமான சாவகாசங் கொடுக்கத்தக்கதாக கமிட்டிமெம்பர்கள் தகுந்த ஏற்பாடுகள் செய்யவேண்டும். ஒட்டுகள் (சம்மதிகள்) கொடுக்கப்படும் ஒவ்வொரு ஆபீசுக்கும் இரண்டு டெல்லர்களுக்கு குறையாமல் நியமிக்க வேண்டியதவசியம். ஒவ்வொரு எலெக்டரும் தன்னுடையவும் யாருக்கு கமிட்டி மெம்பர் வேலையாகவேணுமென்றுசொல்லுகிறார்களோ அவர்களுடையவும் பெயர் இருப்பிடம் தொழில் அல்லது மற்ற அடையாளங்களை எழுத்து மூலமாய் உறுதியாய்ச்சொல்லவேண்டும்.

VIII. எலெக்டர்களுடையவும் அவர்கள் சம்மதி கொடுக்கும் நபர்களுடையவும் பெயர் முதலிய விபரங்களை கமிட்டியாரால் தயாரித்துக்கொடுக்கப்பட்டிருக்கிற ஒரு புஸ்தகத்தில் உடனே பதிவுசெய்

யவும் அதில் ஓட்டர்களின் கையெழுத்து அல்லது கைக்குறிகள் வாங்கவும் டெல்லர்கள் கடமைப்பட்டவர்கள். சம்மதி கடிதங்களெல்லாம் டெல்லர்களால் பூர்த்திசெய்யப்படவேண்டும்.

IX. குறிப்பிட்ட பாரங்களின்படி பதிவு புஸ்தகங்களிருக்க வேண்டும். ஓட்டுகள் முடிந்தவுடனே ஓட்டுகளை ரிஜிஸ்டர் பதிவு செய்த டெல்லர்கள் யாவரும் ஷை புஸ்தகத்தில் கையெழுத்து செய்யவேண்டும்.

X. ஓட்டுகள் முடிவான 24 மணி நேரத்துக்குள் எலெக்ஷன் தீர்மானத்தை மற்ற கமிட்டிமெம்பர்கள் சொல்லவேண்டும்.

XI. அவ்வித எலெக்ஷன் தீர்மான விபரங்கண்ட நோட்டீஸ் கமிட்டி மெம்பர்களாலும் டெல்லர்களாலும் கையெழுத்து செய்யப்பட்டு உடனே ஜில்லா கெஜட்டுகளில் மூன்று முறை அடுத்தடுத்து பிரசுரஞ்செய்யப்பட வேண்டியதுடன் ஷை கமிட்டிக்குள்பட்ட எல்லா தேவஸ்தானங்களிலும் பயிரங்கமான ஸ்தலங்களில் அந் நோட்டீஸ்கள் ஒட்டப்படவேண்டும்.

XII. எலெக்ஷன் தீர்மானம் செய்யப்பட்டபின் ஒரு பட்சம் அதாவது 15 நாள் வரையில் ஓட்டுகள் பதிவு புஸ்தகம், ஓட்டு டாப்புக்ள், ஓட்டு பேபர்கள், இவைகளை எலெக்டர்கள் பரிசோதிக்கும்படி எலெக்ஷன் நடந்த பட்டணத்தில் ஒரு சவுகரியமான இடத்தில் வைத்திருக்கவேண்டியதுமன்றி கமிட்டியாபீஸிலிருக்கப்பட்ட மற்ற ரிகார்டுகளுடன் அவைகள் மிகுந்த ஜாக்கிரதையாக வைக்கப்பட வேண்டும்

XIII. அடியில் கண்ட நபர்கள் தேவஸ்தானம்கமிட்டிமெம்பர்களை தேர்ந்தெடுப்பதில் சம்மதிகொடுக்க பாத்தியமுடையவர்கள்.

(a) தேவஸ்தானம்கமிட்டியார் எல்லைக்குள்பட்ட விடங்களில் ஷு 1க்கு ரூ 20க்கு குறையாத சர்க்கார் இஸ்தி செலுத்தும் பூஸ்திதியுடையவர்கள்.

(b) பூரா இனும் அல்லது சிலபாகம் இனும்பட்டாவுள்ளவும் அவ்வித இனும் ஏற்படாவிட்டால் மெற்கண்ட

படி ரூ 20க்கு குறையாத சர்க்கார் கிஸ்தி செலுத்தக்கூடியதுமான பூஸ்திதியுடையவர்கள்.

(c) அவ்விடங்களில் ரூ 250க்கு குறையாத வீடு கட்டிடமுடையவர்கள்.

(d) அவ்விடங்களில் ஞூ 1க்கு ரூ 50க்கு குறையாதவாடகை வரக்கூடிய கட்டிடங்களுள்ளவர்கள்.

(e) அவ்விடங்களில் ஞூ 1க்கு ரூ 150க்கு குறையாத சர்க்கார் சம்பளம் அல்லது சர்க்கார்பென்ஷன் வாங்குகிறவர்கள்.

(f) அவ்விடங்களில் ஞூ 1 க்கு ரூ 150 க்கு குறையாத வரும்படி சம்பாதிப்பவர்கள்.

(g) அந்த கமிட்டியாருக்குள்பட்ட தேவாலயங்களில் ஞூ 1 க்கு ரூ 50 க்கு குறையாத உபயஞ்செய்பவர்கள் அல்லது அத்தேவாலயங்களுக்கு ரூ 500 க்கு குறையாத தொகை கொடுத்தவர்கள்.

(h) அந்த கமிட்டியார் எல்லைக்குள்பட்ட விடங்களில் 6மாதங்களுக்கு குறையாமல் வசித்த B. A. பரீட்சை கொடுத்தவர்கள். (வித்தியாபட்டம் பெற்றவர்கள்)

(i) மேற்கண்ட அந்தஸ்தில்லாதவர்கள் தாங்கள் ஓட்டுகள் கொடுக்க அருகருள்ளவர்களென்றபாத்தியங்கொண்டாடுவார்களானால் கமிட்டியாருக்கு திருப்திகரமாக அவர்கள் பாத்தியங்களை ஸ்தாபிக்கவேண்டும். தேவஸ்தானம்கமிட்டிக்குள்பட்ட தேவஸ்தானங்களில் எந்தமதானுஷ்டானங்களைகொண்டாடுகிறார்களோ அந்த மதானுஷ்டானங்களையுடையவர்களாக ஓட்டர்கள் இருக்க வேண்டியதுமன்றி ஷை தேவாலய விஷயங்களில் அக்கறையுள்ளவர்களாகவும் மைனர்களாயில்லாமலும் இருக்கவேண்டும். மேலும் ஓட்டர்கள் எந்த காலிவேலைக்கு ஓட்டுகொடுக்க பிரியப்படுகிறார்களோ அந்த காலி யேற்படுவதற்கு 7 தினங்களுக்கு முன்ன

மே அவர்கள் பெயர் ரிஜிஸ்டர்களில் பதிவு செய்யப்பட்டிருக்கவேண்டும்.

XIV. ஒவ்வொரு கமிட்டியாரும் ஓட்டர்களின் பதிவு புஸ்தகங்கள் வைக்க கடமைபட்டவர்கள். எலெக்ஷனில் ஓட்டுகொடுக்கக் கூடிய பாத்தியமுள்ளவர்களின் பெயர், தொழில், முதலிய விபரங்களும் அந்தஸ்தும், அப்புத்தகங்களில் எழுதப்படவேண்டும். இதில்குறிப்பிட்ட அந்தஸ்துடையவர்களாயிருப்பதாக கமிட்டியாருக்கு திருப்திகரமாக ருஜுப்பிப்பவர்கள் தங்கள்பெயர்முதலிய விபரங்களை ஓட்டர் ஜாப்தாவில் பதிவு செய்துகொள்ள பாத்தியமுடையவர்கள். அந்த ரிஜஸ்டரில் பதிவான பெயர்முதலான விபரங்கண்ட நகல் ஒன்று அவர்களுக்கு கொடுபடவேண்டும்.

XV. ஒவ்வொருகாலிவேலைக்கும் ஒவ்வொருவரும் ஒரு ஓட்டுதான் கொடுக்கலாம்.

XVI. அந்த கமிட்டியாருக்குள்பட்ட தேவஸ்தானங்களுக்கு வருஷம் 1க்கு ரூ500க்கு குறையாத உபயம் செய்கிறவர்களாகவாவது அல்லது ரூ5000த்துக்குகுறையாததுகைதேவஸ்தானதருமங்களுக்கு கொடுத்தவர்களாகவாவது ஓட்டர்களாகவிருக்கும்பட்சத்தில் அவர்கள் ஆஜரில்லாவிட்டால் அதிகாரம்பெற்ற அசாமியை அனுப்பிஓட்டுக்கொடுக்கச் செய்யலாம். அவ்வித அதிகாரபத்திரமானது சப்மாஜிஸ்டிரேட் அந்தஸ்துக்கு குறைவில்லாத சர்க்கார் உத்தியோகஸ்தர் முன்பாக எழுதப்பட்டு அவ்வுத்தியோகஸ்தர் சாக்ஷியமும் வாங்கப்படவேண்டும்.

XVII. ஓட்டர்கள் வேணுமென்று ஒவ்வொருகாலிக்கும் ஒவ்வொரு ஓட்டுக்கு மேல் ஜாஸ்தியாக கொடுத்ததாக ருஜு ஏற்பட்டால் மறுபடியும் அவர்கள் ஓட்டுகொடுக்க அருகமற்றவர்களாகி அவர்கள் பெயர் ரிஜிஸ்டரினின்றும் நீக்கிவிடப்படும்.

XVIII. எந்த நபர்பேருக்கு ஜாஸ்தி ஓட்டுகள் கொடுக்கப்படுகிறதோ அவரை கமிட்டிமெம்பர்ளில் ஒருவராக தேர்ந்தெடுக்கப்பட்டதாகதீர்னிக்கப்படவேண்டும். இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட நபர்களுக்கு சமமான ஓட்டுகள் கிடைத்ததாக ஏற்படும்பட்சத்தில் அவர்கள் பெயர்களை சீட்டுப்போட்டு பொறுக்கி யெடுத்து நியமனஞ்செய்யவேண்டும்.

XIX. ஒருவர் வெளிப்படையாகவாவது வெளிக்குத் தெரியாம லாவது மதிப்பான பிரதி பிரயோஜனப்படுத்தி ஒருவரை தனக்கு ஓட்டு கொடுக்கச்செய்திருப்பாராஞல் அந்த எலெக்ஷனில் அவருக் கு ஏற்படும் கமிட்டிமெம்பர் நியமனம் செல்லமாட்டாது.

XX. இந்த ரூல்களின்படியல்லாது வேறுவிதமாக செய்யப்படும் எலெக்ஷன் நிஷ்பிரயோஜனமுள்ளது.

[ஜூரிலிஸ்டுகள் புதுப்பிக்கப்படுவதுபோல வருஷப்பிரதி வரு ஷமாவது அல்லது 5வருஷங்களுக்கு ஒரு முறையாவது ஓட்டர்களி ன் லிஸ்டுகள் புதிப்பிக்கப்படாவிட்டால் இறந்த அல்லது வசிக்குமிட மாற்றிய அல்லது வறுமையடைந்த ஓட்டர்கள் இன்னவர்களென்பதை தெரிந்துகொள்ள இடமில்லை. எலெக்ஷன் காலத்தில் நியமிக்கப்படும் டெல்லர்கள் (அறிவிப்பவர்கள்) ஓட்டர்களாகவருபவர்கள் இன்னின் னவர்களென்றும், அவர்கள் பெயர் முதலியன ரிஜிடரில் பதிவுசெய்ய ப்பட்டிருக்கிறதா இல்லையாவென்பதையும், தெரிந்துக்கொண்டிருக்க மாட்டார்கள். ஷை ஸ்டாண்டிங்கார்டர் 14-வது பாராவில் கண்டபடி ஓட்டர்கள் ஒவ்வொருவருக்கும் கொடுபட்டிருக்கும் பெயர் முதலிய பதிவு காபியை ஒவ்வொருவரும் கொண்டுவரச் செய்து அவைகள் ஓட்டர் ரிஜிஸ்டரில் ஏற்பட்டிருப்பதற்குபொருத்தமாயுள்ளனவா வெ ன்பதைடெல்லர்கள்பார்ப்பதுமில்லை.பார்க்கசாவகாசமுமில்லை. மேற்க ண்டகாரணங்களினால் ஆள்மாருட்டங்கள், பொய்கையெழுத்துபோடு தல் முதலிய பிரட்டுகள் நடக்க ஹேதுவாயிருக்கிறது. ஆகையால் ஓ ட்டர்களின் லிஸ்டுகள் 5 வருஷங்களுக்கு ஒரு முறையாவது ரெவி னியூ அதிகாரிகளைக்கொண்டு நன்ருய் விசாரித்து எடுக்கவேண்டிய தென்றும, எலெக்ஷன் ஏற்படுங்காலங்களில் தேவாலயங்களுள்ளவு ம் தேவாலயங்களுக்கு சமீபமயுள்ளவுமான கிருமங்களிலுள்ள கிரும நவுக்கர்கள் அவரவர்கள் வட்டத்திலுள்ள ஓட்டர்களையும், முனிஸி பாலிடி யூனியன் பட்டணங்களின் முனிஸிபல் அல்லது யூனியன் மெம்பர்கள் அவரவர்கள் வார்டிலுள்ள ஓட்டர்களையும், அழைத்துச் சென்று ஓட்டுகள் கொடுக்கச்செய்து ஓட்டர்களுடன்கூட அவர்க ளும் கை யெழுத்து சாக்ஷியம் செய்வார்களாஞல் எவ்வித பிசகுகளு ம்நடக்கஹேதுவிராது. இவ்விதமான ஸ்டாண்டிங்கார்டர்(Standing order) பிறப்பிவிக்கச்செய்யவேண்டியது கவர்ன்மெண்டாரின் மு க்கியகடமை.]

12. மேற்கூறியவிதந்தான் கமிட்டிமெம்பர்கள் நியமிக்கப்படவேண்டுமென்பது அவசியமில்லை. டிஸ்டிரிக்டு கோர்ட்டார் அபிப்பிராயப்பட்டால் அவர்களுக்கிஷ்டப்பட்ட தக்கனவான்களை கமிட்டிமெம்பர்களாக நியமிக்கலாம். அந்த நியமனத்தைப்பற்றி ஆக்ஷேபிக்க எவர்களுக்கும் பாத்தியமில்லை அந்த மெம்பர்களை துர்நடத்தை, வேலைபார்க்கமுடியாமை இவ்விஷயங்களுக்கன்றி மற்றகாரணங்களை முன்னிட்டு அவர்கள் ஆயுள்பரியந்தம் நீக்கமுடியாது. அவர்கள் தங்களுக்கு இஷ்டப்பட்டால் எந்தக்காலத்திலாவது தங்கள் வேலையினின்றும் நீங்கி விடலாம். இந்தியன் லாரிப்போர்ட்டு 6. சென்னை. 114. திருவேங்கடம் வாதி. ரெங்கா பிரதிவாதி. I. L. R. Mad. 114. Tiruvengada *v.* Ranga.

---

## மோகினித்துகைகள் கொடுபடவேண்டியதைப்பற்றி 78-வதுஸ்டாண்டிங்கார்டர்.

13. தேவஸ்தானம்கமிட்டியாருக்குள்பட்ட தேவாலயங்களுக்கு கவர்ன்மெண்டாரால் கொடுபடவேண்டிய மோகினித்துகை இன்னின்ன தர்மகர்த்தாக்களிடம் கொடுபடவேண்டுமென்பதை தாசில்தார்கள் கமிட்டிமெம்பர்களை கேட்டுத் தெரிந்துகொண்டு அதுவிபரங்களை சம்மந்தப்பட்ட கிருமகவுக்கர்களுக்கு அறிவித்து மோகினித்துகைகள் பட்வோடா செய்யப்படவேண்டும்.

14. தேவஸ்தானம்கமிட்டியாருக்குள்படாத தேவாலயங்களின் மோகினித்துகைகள் மாமூலாக யாருக்கு கொடுபட்டுவந்ததோ அவர்களுக்குத்தான் கொடுக்கப்படவேண்டும். ஷை தேவாலயங்களின் தர்மகர்த்தா பாத்தியதைகளைப்பற்றியாவது மோகினித்துகைகொடுபடவேண்டியதைப்பற்றியாவது தகரார் ஏற்படுமானால் ரெவனியூ அதிகாரிகள் அவ்வழக்குகளை விசாரிக்க பாத்தியஸ்தர்களல்ல. அவ்வழக்குகள் தகுந்த சிவில் கோர்ட்டாரால் விசாரிக்கப்பட்டு தீர்ப்பு ஏற்பட்ட பிறகு அந்தத்தீர்ப்பை அனுசரித்து தீர்ப்பின்படி யார்பாத்தியஸ்தர்களென்று ஏற்படுகிறார்களோ அவர்களிடம் மோகினித்துகைகள் பட்வோடா செய்யப்படவேண்டும்.

15. கமிட்டிமெம்பர்கள் அவர்களுக்குள்பட்ட எந்த தேவாலயத்துக்கும் பஞ்சாயந்தார்களாக இருக்கக்கூடாது.

16. தேவஸ்தானம்கமிட்டிமெம்பர்கள் காலியானால் அவ்வேலைக்கு பதில் நியமிக்கவேண்டியது டிஸ்ரிக்ட் ஜட்ஜியின் முக்கிய கடமை. அவர் செய்யும் நியமனம் சரியல்லவென்பதாக ஹைகோர்ட்டாருக்கு அப்பீல் செய்ய எவ்வித சட்டாதாரமுங் கிடையாது. இ. லா. ரி. 11 சென். 26. பி. க. மீனாட்சி வாதி. சுப்பிரமணியன் பிரதிவாதி. I. L. R. 11 Mad. 26. Meenakshi *v.* Subramaniyan.

---

## தர்மகர்த்தாக்களின் நியமனம்.

17. மேற்கூறிய 1-வது வகுப்பு தர்மகர்த்தாக்கள் தேவஸ்தானம் கமிட்டிமெம்பர்களால் நியமிக்கப்பட்டு அவர்கள் உத்திரவுகளுக்குள்பட்டு வேலைபார்க்கவேண்டும்.

18. தேவஸ்தானம் கமிட்டியாருக்குள்பட்ட கோவில்களின் தர்மகர்த்தாக்கள் இறந்தபின் அவர்களுக்கு பதில் நியமிக்கும் விஷயங்களில் டிரஸ்டு ஆக்ட்டு 49-வது செக்ஷனில் கண்ட நிபந்தனைகளை யனுசரித்து நடக்க தேவஸ்தானம் கமிட்டிமெம்பர்கள் கடமைப்பட்டவர்கள். அதாவது தீர்க்காலோஜனையின்பேரில் தக்க யோக்கியதையுடையவர்களை தேர்ந்தெடுக்கவேண்டும். அந்தப்படி அவர்கள் செய்யாவிட்டால் டிஸ்டிரிக்ட் ஜட்ஜி அந்நியமனங்களை ரத்து செய்து தக்க வேறு நபர்களை தர்மகர்த்தாவாக நியமிக்கலாம். அவ்வித நியமனஞ்செய்யும்படி பக்தர்கள் வழக்கிட பாத்திய முள்ளவர்கள் இ. லா. ரி. 17. சென் 212. ஷேக்டாவூட்செய்பா வாதி. உஸ்ஸேன் செய்பா பிரதிவாதி. I. L. R. 17. Mad. 212. Sheik davudsaiba *v.* Hussiensaiba.

19. சிவன்கோவில்களுக்கு வைஷ்ணவர்களையும் விஷ்ணுகோவில்களுக்கு சிவமதஸ்தர்களையும் தர்மகர்த்தாக்களாக நியமிப்பது பிசகானகாரியமென்வருது, அலக்ஷியமென்ருவது, அல்லது நம்பிக்கைமோசமென்வருது ஆகமாட்டாது. அந்நியமனங்களைப்பற்றி ஆக்ஷேபிப்பது செல்லமாட்டாது. இ. லா. ரி. 7. சென்னை 222. காந்தவதாரா வாதி. தேவநாயகா பிரதிவாதி. I. L. R. 7. Madras 222. Kanthavathara *v.* Devanayaga.

20. ஒரு தேவஸ்தானம் பஞ்சாயத்தார்பேரில் ஏற்பட்ட புகாரைப்பற்றி கமிட்டிமெம்பர்களிலொருவர் விசாரித்து மற்ற கமிட்டி

மெம்பர்கள் நாலு பேர்களில் இருவருக்குமட்டில் அறிவித்து ஷை பஞ்சாயத்தாரை அவர்கள் முன்பாக ஆஜராகும்படி உத்திரவு செய்தார்கள். அவ்விதம் ஆஜராவதற்கு தேதியுங் குறிப்பிடவில்லை. பஞ்சாயித்தார் அவ்வுத்திரவை கவனிக்கவுமில்லை. "மேற்சொன்ன மூவருஞ்சேர்ந்து ஷை பஞ்சாயித்தாரை "தள்ளுபடி" செய்துவிட்டதாக உத்திரவு எழுதி அதில் அவர்கள் கையெழுத்து செய்து மற்ற இரண்டு கமிட்டிமெம்பர்களும் அதில் கையெழுத்து செய்யவேண்டியதாக அனுப்பியதில் அதில் அவர்கள் கையெழுத்து செய்யவில்லை. மேற்சொன்ன உத்திரவு செல்லமாட்டாதென பஞ்சாயத்தார்வழக்கிட்டதில் கம்பெனி நடவடிக்கைகள் போல கமிட்டிமெம்பர்கள் ஒன்று சேர்ந்து ஒருமனதாய் தீர்மானஞ்செய்யக் கடமைப்பட்டவர்களென்றும், அவ்விதம் செய்யாததால் ஷை உத்திரவு செல்லத்தக்கதில்லையென்றும் தீர்மானஞ்செய்யப்பட்டது. இ. லா. ரி. 23 சென்னை 483 தாண்டவராயபிள்ளை வாதி. சுப்பய்யர் பிரதிவாதி. I. L. R. 23. Madras 483. Thandavaraya Pillai *v.* Subbayyar.

---

## கமிட்டிமெம்பர்களின் கடமை.

21. தேவஸ்தானம் கமிட்டிக்குள்பட்ட தேவாலயங்களுக்கேற்பட்டிருக்கும் தர்மகர்த்தாக்கள் தருமசொத்துக்களை தகாதவழிகளில் விரயப்படுத்தாமல் ஏற்பட்ட தருமங்களை சரிவர நடத்திவரச்செய்ய வேண்டியது கமிட்டிமெம்பர்களின் முக்கியகடமை ஆனால் அவர்கள் நேரில் பிரவேசித்து தருமங்களை நடத்தும்படியான பாத்தியங்கள் அவர்களுக்கில்லை. இ. லா. ரி. 22. செ. 361. திருவேங்கடத்தய்யங்கார் வாதி. ஸ்ரீனிவாசதாதாசாரியார் பிரதிவாதி. I. L. R. 22. Mad. 361. Thiruvengadathaiangar *v.* Sreenivasa Thathachariar.

22. 2-வது வகுப்பு தர்மகர்த்தாவேலைக்கு அருகமுள்ளவார்சுகளைப்பற்றி ஆக்ஷேபணைகள் ஏற்படும்பட்சத்தில் அத்தேவாலயவிஷயங்களில் அக்கரையுள்ளவர்கள் ஷை தர்மகர்த்தாவேலைக்குத் தக்கவர்களை நியமிக்கவேண்டுமென்று டிஸ்டிரிக்ட்கோர்ட்டாருக்கு மனு செய்துகொள்வதின்பேரில் அக்கோர்ட்டார் இஷ்டப்பட்ட தகுந்த கனவான்களை தர்மகர்த்தாவாக நியமிக்கலாம். வார்சுபாத்தியம் கொண்டாடுகிறவர்கள் தகுந்த சிவில் கோர்ட்டு மூலமாய் தங்கள் பாத்தியங்

களை ஸ்தாபித்துக்கொள்ளும்வரையில் மேற்சொன்ன நியமனம் செல்லுபடியுள்ளது. அந்தப்படி டிஸ்டிரிக்ட் கோர்ட்டார் நியமனம் செய்யாவிட்டால் அந்நியமனஞ்செய்யவேண்டியதைப்பற்றி ஹை கோர்ட்டாருக்கு அப்பீல் செய்துகொள்ளலாம் இ. லா. ரி. 19. சென்னை 285. சோமசுந்தரமுதலியார் வாதி. வைத்திலிங்க முதலியார் பிரதிவாதி. I. L. R. 19· Madras 285. Somasundra Mudaliar v. Vythilinga Mudaliar.

23. இந்த வகுப்பு தர்மகர்த்தாக்கள் நியமிக்க டிஸ்டிரிக்ட் கோர்ட்டாருக்கு அதிகாரமிருக்கிறதேயன்றி 1-வது வகுப்பு தர்மகர்த்தாக்களைநியமிக்க அதிகாரமில்லை. அந்நியமனங்கள் கமிட்டிமெம்பர்களால் செய்யப்படவேண்டும் இ. லா.ரி. 3. சென்னை 401. இட்டுணிபணிக்கர் வாதி. ஐராணி நம்புட்ரிபாட் பிரதிவாதி. I. L. R. 3. Madras 401. Ittunipanikkar v. Iraninambudripad.

24. மதசம்பந்தமான தர்மங்களுக்கு ஏற்பட்ட சொத்துகளை மானேஜ் செய்தல், அது சம்பந்தமாய் கோவில் பூஜையாராதனை முதலியன நடத்தல், அக்கோவில் பிரசாத முதலியனவற்றையடைதல் இவைகளின் பாத்தியம் ஒரு குடும்பஸ்தருக்கு ஏற்பட்டிருக்கிறதென்று திருப்திகரமான ருஜு ஏற்படும்பட்சத்தில் அப்பாத்தியங்களினின்றும் அக்குடும்பஸ்தர்களை விலக்கமுடியாது. டிக்கிரிகடனுக்காக அவைகளை ஏலம் போடப்படவுங்கூடாது இ·லா.ரி. அலகபாத் 81. துர்க்காபீபீ வாதி. சன்சல்றம் பிரதிவாதி. I. L. R. 4. All 81. Durgabeebi v. Chanchalram.

25. ஒரு தேவஸ்தானமானது கமிட்டிமெம்பர்களுக்குள்பட்டதா அல்லது வம்சபரம்பரையான பாத்தியஸ்தர்களுடையதாவென்ற விவாதம் ஏற்படுமானால் கமிட்டிமெம்பர்கள் தங்கள் கம்மிட்டிக்குள்ப்பட்டதென்பதை திருப்திகரமாய் ருஜுப்படுத்தினாலல்லது அவர்கள் பாத்தியஸ்தர்களாகமாட்டார்கள். இ· லா. ரி. 12. சென்னை 336. பாண்டுரேங்கா வாதி. நாகப்பா பிரதிவாதி. I. L. R. 12. Madras 366. Ponduranga v. Nagappa.

---

## தர்மகர்த்தாக்களின் கடமை.

26. தர்மசொத்துக்களின் வரவு சிலவுகளுக்கு ஒழுங்கான கணக்குகள் வைக்க தருமகர்த்தாக்கள் கடமைப்பட்டவர்கள், தேவஸ்

தானம் கமிட்டிமெம்பர்களுக்குள்பட்ட தேவாலயங்களின் தர்மகர்த்தாக்கள் வருஷத்துக்கொருமுறையாவது அக்கணக்குகளை கமிட்டி ஆபீசுக்கு அனுப்பவேண்டும். அவ்வித கணக்குகள் கமிட்டி ஆபீசில் இருக்கவேண்டியதவசியமானது.

[ஆனால் இக்கணக்குகள் வைக்கப்படவேண்டிய விதங்கள் இன்னவையென்பதற்கு யாதொரு சட்டமாவது நிலையான உத்திரவுகளாவது (Standing orders) ஏற்படவில்லை அக்கணக்குகள் சரிபிசகென்பதை கமிட்டிமெம்பர்கள் தெரிந்துகொள்ள ஹேதுவில்லை. மேலும் அக்கணக்குகள் பொதுஜனங்களுக்கு காட்டபடுதேமில்லை அக்கணக்குகளின் எந்த பாகமாவது ஜில்லா கெஜட் முதலியவைகளில் பிரசுரஞ்செய்யப்படுவதுமில்லை. அதனால் தர்மகர்த்தாக்கள் இன்ன பிசகு செய்கிறார்களென்பதை விபரமாய் தெரிந்துகொண்டு அவர்கள்பேரில் டிஸ்டிரிக்ட் கோர்ட்டில் மனுக்கொடுக்க சாத்தியப்படவில்லை. ஒருவர் ஒரு தர்மகர்த்தாவின்பேரில் அவர் தர்மசொத்துக்களை சொந்த உபயோகப்படுத்திக்கொண்டிருப்பதாக டிஸ்டிரிக்ட் கோர்ட்டில் மனுக்கொடுத்தால் தர்மகர்த்தா தர்மசொத்துகளை சொந்த உபயோகப்படுத்திய விபரங்கள் ஒவ்வொன்றையும் விபரமாய்ச்சொல்லும்படி அதாவது எந்த மாதம் எந்த தேதியில் வரவு வந்த தொகைகளை மறைத்தாவது செலவழியாத தொகைகளை செலவழித்ததாகவாவது கணக்கெழுதி சொந்த உபயோகப்படுத்தி யிருக்கிறாரென்பதை சொல்லும்படி டிஸ்டிரிக்ட் கோர்ட்டார் கேட்கிறார்கள். தர்மகர்த்தாக்கள் வைத்திருக்கும் கணக்குகளை சோதித்துப்பார்த்தாலன்றி மேற்சொன்ன விபரங்கள் தெரிந்துக்கொள்வது எவ்விதத்திலும் சாத்தியமில்லை அக்கணக்குகளை பக்தர்களுக்கு காட்டவேணுமென்கிற சட்டமுமில்லை.]

27. மேற்கூறிய சங்கடங்களையெல்லாம் சென்னை ஹைகோர்ட்டாரவர்கள் நன்றாயுணர்ந்து தர்மகர்த்தாக்கள் வைத்திருக்கும் கணக்குகளை பக்தர்கள் பார்க்க பாத்தியமுடையவர்களென்று தீர்மானித்திருக்கிறார்கள். இ. லா. ரி. 24. செ. 232. 233. அண்ணுசாமி பிள்ளை வாதி. றமகிருஷ்ணமுதலி பிரதிவாதி. I. L. R. 24. Mad. 232. 233. Annasami Pillai *v.* Ramakrisna Mudali.

[தர்மசொத்துகளின் வரவுசிலவுகணக்குகளை பக்தர்களுக்கு காண்பிக்க ஆக்ஷேபிக்கும்பட்சத்தில் பக்தர்கள் தங்களுக்

குள்ள பாத்தியங்களை ஸ்தாபித்துக்கொள்ள 10 நூ ஸ்டாம்பில் வழக்கிட்டு தீர்ப்பு பெற்று அக்கணக்குகளை பார்வையிட்டு பிசகுகளை கண்டுபிடித்து அதன்பேரில் டிஸ்டிரிக்ட் கோர்ட்டில் மனு முதலிய ன கொடுத்து நடவடிக்கை நடத்தவேண்டியதாகவிருக்கிறது.]

28. தேவாலயங்கள் அனேகமாய் எல்லாவற்றிற்கும் இனும் நிலங்கள் ஏற்பட்டிருக்கின்றன. அந்த இனும் நிலங்கள் எந்த தர்மத்துக்காக ஏற்பட்டிருக்கிறதோ அந்தப்படி தர்மங்கள் நடத்தப்படா விட்டால் ரெவினியூபோர்டு 54-வது ஸ்டாடிங் ஆர்டர்ப்படி இனும் நிலங்களை திறப்பு தாக்கல் செய்யவேண்டியதற்காக ரெவினியூபோர்ட்டாரவர்களுக்கு தெரிவிக்க ரெவினியூ கீழ் உத்தியோகஸ்தர்கள் கடமைப்பட்டவர்கள்.

[தர்மகர்த்தாக்கள் வைக்கும் கணக்குகளை ரெவினியூ அதிகாரிகள் பார்த்தாலன்றி தர்மகர்த்தாக்கள் செய்யும் பிசகுகள் இன்னதென்று புலப்படாது. தர்மங்கள் சரியாய் நடக்கவில்லை யென்று ஏஷியமாகச் சொல்லவேண்டிவருகிறது. அது எவ்விதத்திலும் நியாயமானதல்ல. ஆகையால் ரெவினியூ உத்தியோகஸ்தர்களுக்காவது தர்மகர்த்தாக்கள் வரவு சிலவு கணக்குகளை காண்பிக்கவேண்டுமென்று ஓர் சட்டம் அல்லது ஸ்டாண்டிங் ஆர்டர் ஏற்படாத பக்ஷத்தில் தருமங்கள் சரியாய் நடக்காது. ஆகையால் தருமசொத்துக்களின் விபரங்களுக்கும் அவைகளின்வரும்படி சிலவுகளுக்கும் ஒழுங்கானகணக்குகள் வைக்கும்படி சில நமூனுக்கள் ஏற்படுத்திக்கொடுத்து அந்தப்படி கணக்குவைக்கும்படி கட்டாயப்படுத்தவும் அவைகளைப் பார்க்கத்தக்க அந்தஸ்துள்ளவர்கள் இன்னவர்களென்பதை ஏற்படுத்தி அவர்களுக்கு அக்கணக்குகளை குறிப்பிட்ட சிலகாலங்களில் காண்பிக்கச்செய்யவும் மேலான ரெவினியூ அதிகாரிகள் அக்கணக்குகளை சோதித்து கணக்குகள் அனுப்பிவரவும் ரெவினியூபோர்ட்டாரவர்கள் ஸ்டாண்டிங் ஆர்டர் பிறப்புவிக்கும் பட்சத்தில் தர்மகர்த்தாக்கள் எவ்வித பிசகும் செய்ய இடமிராது. பிசகுகள் செய்தால் அவைகளை வெகுசுளுவாய் கண்டுபிடித்து அவர்களால் ஏற்பட்ட நஷ்டம் அல்லது அவர்கள் அபகரித்த துகைகள் இவைகளை அவர்களிடம் அப்போதைக்கப்போது வசூல்செய்துவிடலாம்.]

## தர்மசொத்துகளைச்சொந்த உபயோகப் படுத்தும் தர்ம்கர்த்தாக்களின்பேரில் வியாச்சியம் தொடுத்தல்.

29. தர்மகர்தாக்களாவது கமிட்டிமெம்பர்களாவது தர்மசொத்துகளை சொந்த உபயோகப்படுத்தினாலும் தருமங்களுக்கு விரோதமான காரியங்களைச்செய்தாலும், அவர்கள் செய்யவேண்டிய கடமைகளில் அசட்டையாகவிருந்தாலும், அத்தேவாலயதருமங்களில் பாத்தியம் அல்லது அக்கரையுள்ளவர்கள் ஷை தர்மகர்த்தா கமிட்டிமெம்பர்கள்பேரில் வியாச்சியம் தொடுக்க டிஸ்டிரிக்ட் கோர்ட்டாரிடம் சாங்கிஷன் பெற்றுக்கொண்டு, அத்தர்மகர்த்தா முதலியவர்களை விலக்கி, அவர்கள் ஸ்தானத்தில் வேறு தக்கவர்களை நியமிக்கவும், அவர்கள் அபகரித்த அல்லது ஏற்படுத்திய நஷ்டங்களை அவர்களிடம் வசூலிக்கவும் வழக்கு தொடுக்கலாம். அவ்விதவழக்குகள் இருவகைப்படும்.

(1) 1863-ம்ஹூத்திய 20-வது ஆக்டு 14, 18-வது செக்ஷன்களின்படி நடவடிக்கை நடத்தல்.

(2) சீவில் புரொசிஜர்கோடு 539-வது செக்ஷன்படி வியாச்சியம் செய்தல்.

30. 1-வது வகுப்பு வியாச்சியம் எந்த பக்தரும் தனிமையில் நடத்தலாம்.

31. 2-வது வகுப்பு வியாச்சியம் செய்வதாயிருந்தால் தேவாலய தருமங்களில் பாத்தியமுடைய இருவர் அல்லது அதற்கு மேற்பட்டவர்கள் அட்வோகேட்ஜெனரல் அல்லது கலெக்ட்டர் துரையவர்களிடம் சாங்கிஷன் பெற்று வழக்கிடவேண்டும். இந்த செக்ஷன்படி வழக்கிடுவதில் ஜாஸ்திபான பரிகாரங்கள் கேட்கலாம். அவையாவன:— தர்மசொத்துகளை விசாரணை செய்யவேண்டிய மார்க்கங்கள், தர்மசொத்துகளை போக்கியம் பெந்தகம் பரிவர்த்தனை முதலிய பராதீனங்கள் செய்தல், இன்னின்ன துகைகளைக்கொண்டு இன்னின்ன தருமங்கள் செய்தல் இவ்விபரங்கள் கண்டு வழக்கிட்டு அந்தப்படித் தீர்ப்பு பெறலாம்.

32. இத்தீர்ப்பின்படி நடவடிக்கைகள் நடத்த தர்மகர்த்தாக்கள் கடமைப்பட்டவர்கள் இதற்கு விரோதமாக எவ்விதகாரியங்க

ளும் செய்பக்கூடாது. அவ்விதம் செய்தால் அவர்கள் பேரில் வே று வியாச்சியம் செய்யாமலே முன் தீர்ப்பை நிறைவேற்றி தர்மகர்த் தாவை வாரண்டில் பிடித்து ஜெயிலுக்கனுப்பலாம். அல்லது அவர் களுடைய சொத்துகளை ஜப்தி செய்து ஏற்பட்ட நஷ்டங்களை வசூ லிக்கலாம். மேற்சொன்ன இருவிதமாகவும் ஏக காலத்தில் நிறைவே ற்றலாம். இ. லா. ரி. 24. பம்பாய். 45. தாமோதர்பாத் வாதி. போஜி லால் பிரதிவாதி. I. L. R. 24 Bom 45. Damodarbhat *v.* Bhogilal.

33. 1817ம் வருஷத்திய 17-வது ரெகுலேஷன் ஏற்பட்டதற் குப் பிந்தி 1863ம் வருஷத்திய 20-வது ஆக்டு ஏற்படுவதற்கு முந்தி இதன் மத்தியகாலங்களில் ஏற்பட்ட பொது தர்மசொத்துக்கள் துர் வினியோகம் செய்யப்பட்டு அதைப்பற்றி வழக்கிடுவதாகவிருந்தா ல் சிவில் புரொசீஜர் கோடு 539-வது செக்ஷன்படி நடவடிக்கை ந டத்தவேண்டியதேயன்றி 1863ம் ஷுத்திய 20-வது ஆக்டுபடி நட த்த சட்டமில்லை. இ.லா.ரி. 17. சென்னை. 95. முத்து வாதி. கங்காத ரா பிரதிவாதி. I. L. R. 17. Madras. 95. Muthu *v.* Gangathara.

34. மேற்சொன்ன இருவித வழக்குகளும் வம்சபரம்பரையான தர் மகர்த்தாக்களின்பேரிலும் வியாச்சியம்தொடுத்து அவர்கள் நீக்க ப்படலாம். அவர்கள் அபகரித்த அல்லது ஏற்படுத்தியநஷ்டங்களையும் வசூலிக்கலாம். இ. லா. ரி. 2. சென்னை. பக்கீருடின் சாகீப் வாதி. அக்கேனி சாகீப். பிரதிவாதி. I. L. R. 2. Mad. 197. Fakrudin Sahib *v.* Ackeni Sahib.

35. 1863-ம் ஷுத்திய 20-வது ஆக்ட்டு 14, 18-வது செக்ஷன் களின்படி நடவடிக்கை நடத்தவேண்டியதாகவிருந்தால் ஷை தரும சொத்துக்கள் 1817ம் ஷுத்திய 7வது ரெகுலேஷன்படி ரெவினியூ போர்ட்டாரவர்களுடைய விசாரணைக்குள்பட்டிருக்க வேண்டுமென் பதவசியமில்லை. இ. லா. ரி. 26. சென்னை 166. சாத்துர்லூரி சீதாரா மாநுஜசார்லு வாதி. நண்டூரிசீதாபதி பிரதிவாதி. I. L. R. 26. Mad. 166. Saturluri Sitharamanuja Charlu, *v.* Nanduri Seetapati.

---

## சாங்கிஷன் கொடுக்க தர்மகர்த்தாக்களுக்கு நோடீஸ் அனுப்பவேண்டிய தவசியமில்லை.

36 தர்மகர்த்தாக்களின்பேரில் நடவடிக்கைகள் நடத்த டிஸ்டி ரிக்ட் கோர்ட்டாரவர்களிடம் சாங்கிஷன் பெறுவதற்கு கொடுக்கும்

மனு நடவடிக்கைகளில் டிஸ்டிரிக்ட் கோர்ட்டாரவர்கள் தர்மகர்த்தாக்களுக்கு நோட்டீஸ் அனுப்பி அவர்களுடைய ஆக்ஷேபனைகளைக்கேட்டு சாங்கிஷன் கொடுக்கவேண்டு மென்பதவசியமில்லை. இ. லா. ரி. 21. சென். 688, அம்டுமியான் வாதி. மகமட்டாவீட்கான் பகதூர் பிரதிவாதி. I. L. R. 24. 688. Amdoo Miyan v. Mahamud Davidkhan Bahadur.

---

## தர்மசொத்துகளில் தர்மகர்த்தாக்களுக்குள்ளபாத்தியங்கள்.

37. தேவாலய தருமங்களுக்கு ஏற்பட்ட சொத்துகளை பராதீனம் செய்ய தர்மகர்த்தாக்களுக்கு எவ்வித பாத்தியமுமில்லை. தேவாலயங்களின் பூஜை நைவேதனங்கள், தேவாலயங்களை பழுதுபார்த்தல், தேவாலய சொத்துக்களை பிறர் அபகரிக்காதபடி காப்பாற்றுதல் முதலிய அவசியமான செலவுகளுக்கு அத்தேவாலய சொத்துக்களினின்றும் வருஷப் பிரதி வருஷம் கிடைக்கக்கூடிய வரும்படிகளை மட்டில் பராதீனப்படுத்தலாம். இ. லா. ரி. 5. பம். 393. நாராயன் வாதி, சிந்தாமணி பிரதிவாதி. 1. சென்னை. 235. ராஜாவர்மாவலியா வாதி. ரவிவர்மாதன்கிகுட்டி பிரதிவாதி. I. L. R. 5. Bom. 393. Narayan v. Chintamani. 1. Mad. 235. Rajah Varma Valia. v. Ravivarma Kunhi Kutty.

---

## தேவாலயதருமங்களுக்கென்று கடன்கொடுப்பவர்கள்.

38. தேவாலய தர்மகர்த்தாக்களுக்கு தேவாலய தருமத்துக்கென்று கடன் கொடுப்பவர்கள் அத்தர்மகர்த்தாக்கள் கடன் வாங்கவேண்டியதின் அவசியங்களை திருப்திகரமாய்த் தெரிந்து கொண்டு கடன் கொடுக்கவேண்டும். இ. லா. ரி. 1. சென். 298. சம்பந்தமுதலியார் வாதி. ஞானசம்பந்தபண்டாரம் பிரதிவாதி. Mad. 1. L. R. 298. Sambandamudaliar v. Gnasambanda Pandaram.

## தர்மகர்த்தாக்களை நீக்கல்.

39. தர்மகர்த்தாக்கள் தகாதகாரியங்களைச் செய்வராகத்தருந்த ருஜுக்கள் ஏற்பட்டால் கமிட்டி மெஜாரட்டி மெம்பர்களின் அபிப்பிராயப்படி அவர்கள் நீக்கப்படலாம். இ. லா. ரி. 23. சென். 483. தாண்டவராயபிள்ளை வாதி. சுப்பய்யர் பிரதிவாதி. I. L. R. 23. Mad. 483. Thandavaraya Pillai v. Subbayyar.

40. தேவஸ்தானம் கமிட்டியார் விசாரணைக்குள்பட்ட தேவாலயங்களின் தர்மகர்த்தாக்கள் தருமசொத்துகளின் வரவு சிலவுகளுக்கு ஒழுங்கான கணக்குகள் வைத்து அவைகளை கமிட்டிமெம்பர்களுக்கு அனுப்ப கடமைப்பட்டவர்கள். அக்கணக்குகள் அனுப்பாத ஒரே குற்றத்திற்காகவே அவர்கள் நீக்கப்படலாம். இ. லா. ரி. 22. சென். 481. அனந்தநாராயண அய்யர் வாதி. குத்தாலம் பிள்ளை பிரதிவாதி. I. L. R. 22. Mad. 481. Ananthanarayana aiyar v. Kuttalam Pillai.

41. யாசகம் செய்து வசூலாகும் தொகைகளைக் கொண்டு தேவாலய தருமங்கள் நடத்தப்படவேண்டியது மாமூல் வழக்கமாக ஏற்பட்டிருந்தால் தர்மகர்த்தாக்கள் அந்தப்படியே யாஜித்து தருமங்களை நடத்தி வரவேண்டும். அந்தப்படி செய்யாமல் தருமங்களை நிறுத்தி விடுவார்களானால் அந்த அலட்சியத்துக்காகவே அவர்களை தர்மகர்த்தா பாத்தியதையினின்றும் விலக்கி விடலாம். ஜனங்கள் சந்தா தொகை கொடுத்து தேவாலய உபயங்கள் நடத்தப்பட்டு வரும் வழக்கமிருந்தால் அந்த சந்தாவை தர்மகர்த்தா அங்கீகரிக்கமாட்டோமென்று சொல்லக்கூடாது. அப்படி சொல்வதானது தருமகாரியங்களுக்கு விரோதஞ்செய்தலென்னும் குற்றமாகும். அக்குற்றத்திற்காகவே அவர்களை தர்மகர்த்தா பாத்தியதையினின்றும் நீக்கிவிடலாம். இ. லா. ரி. 23. சென். 298. எளையாள்வார் ரெட்டியார் வாதி. நம்பெருமாள் செட்டியார் பிரதிவாதி. I. L. R. 23. Mad. 298. Elayalvar Reddiar v. Namberumal Chettiar.

42. ஒரு தாசி ஒரு தேவாலயவுபயத்திற்கு வேண்டிய சாமான்களையும் காணிக்கைகளையும் கொடுக்க அவைகளை அக்கோவிலதிகாரி அவள் துர்நடத்தை யுள்ளவளென்ற காரணத்திற்காக அங்கீகரிக்க வில்லை. தேவாலயம் யாவருக்கும் பொது ஸ்தலமாகையா

ல் கோவிலுக்கு உபய முதலியன செய்யவருகிற பக்தர்களை தண்ட செய்ய எவருக்கும் பாத்தியமில்லையென்று ஷை தாசி தனக்குள் ள பாத்தியங்களை ஸ்தாபிக்கக்கொண்டுவந்த வழக்கு கிரமமா னதென்பதாக தீர்ப்பு செய்யப்பட்டது. இ. லா. ரி. 6. சென். 151. வெங்கமுத்து வாதி. பாண்டவேஸ்வரன் பிரதிவாதி I. L. R. 6. Mad. 151. Vengamuthoo *v.* Pandaveswara.

43. தேவஸ்தானம் கமிட்டியாரால் தள்ளுபடி செய்யப்பட் ட தர்மகர்த்தா வசத்திலுள்ள தேவாலய சொத்துக்களை புதிதாக நியமிக்கப்பட்ட தர்மகர்த்தா வசூலிக்கவேண்டியதாக விருந்தால் அதைப்பற்றி 1863௵ த்திய 20-வது ஆக்ட்டுப்படி நடவடிக்கை நடத்த இடமில்லை. பூரா ஸ்டாம்புகட்டி சிவில் புரிவீஜரில் ஏற் பட்டபடி அந்தந்த ஜூரிஸ்டிக்ஷனுக்குள்பட்ட சிவில் கோர்ட்டு களில் வழக்கிடவேண்டும். இ. லா. ரி. 6. சென் 54. வீராசா மி வாதி. சுப்பன் பிரதிவாதி. I. L. R. 6. Mad. Veerasami *v.* Subba.

44. தேவாலயம் சத்திரம் இந்த இரண்டு தருமங்களும் சேர்ந்ததாயுள்ள சொத்துக்களைப்பற்றி வழக்கிடுதவாகவிருந்தால் சி பு. கோடு 539-வது செக்ஷன்படி நடவடிக்கை நடத்தக்கூடாது. சாதாரண சிவில் சேஸ்கள் கொடுபடும் கோர்ட்டுகளில் வழக்கிட வேண்டுவதவசியம். இ. லா. ரி. 5. சென். 383. கருப்பன் வா தி. ஆறுமுகம் பிரதிவாதி. I. L. R. 5. Mad. 383. Karuppa. *v.* Arumugam.

45. ஒரு தேவாலயத்திலிருக்கப்பட்ட சாஸ்திரங்களை பூஜி த்து வருவதும் அதை பக்தர்கள் தெரிசித்து வருவதும் நீண்ட கால வழக்கமாய் ஏற்பட்டிருந்தால் அதை கோவில் தர்மகர்த்தா வேறிடங்களுக்கு எடுத்துப்போகக்கூடாது. அப்படி எடுத்துப்போ வாரானால் அதைப்பற்றி 1863 ௵த்திய 20-வது ஆக்ட்டு 14-வ து செக்ஷன்படி நடவடிக்கை நடத்தி அதையவர் இருந்த இடத் தில் வைக்கும்படி கட்டாயப்படுத்தலாம். இ. லா. ரி. 7. கல். 767. டரும்சிங் வாதி. கிஷின்சிங் பிரதிவாதி. I. L. R. 7. Cal. 767. Dhurrumsing *v.* Kishinsing.

46. தர்மகர்த்தாக்கள் மாமூலாக ஏற்பட்ட தருமங்களை சிரவாவது ஜாஸ்திதிட்டமாகவாவது நடத்தலாமேயன்றி நூதனமாக வேறுதருமங்கள் யாதொன்றும் செய்யக்கூடாது. நூதனமாக எவ்வித கட்டிடங்களும் கட்டக்கூடாது. இ. லா. ரி. 20, பம். 46. நவறஜிபோடி. வாதி. நவுறஜிநஸார்வான்ஜி. பிரதிவாதி. I. L. R. 20. Bom. 46. Noveraja Bodi. v. Nouraji Nasarvainji.

---

## தர்மசொத்துகளை பரிபாலிக்க ரிசீவரும் தேவாலய கணக்குகளை சோதிக்க கம்மிஷனரும் நியமிக்கப்படலாம்.

47. தர்மகர்த்தாக்களை தர்மசொத்துகளின் வரவு சிலவுகளுக்கு சரியான கணக்குகள் ஒப்புவிக்கச் செய்யவும் தர்மகர்த்தா யாத்திபதையினின்று விலக்கவும் டிஸ்டிரிக்ட் கோர்ட்டில் கொடுபடும் வழக்கில், அவ்விபாச்சியத்தில் சம்பந்தப்பட்ட தரும சொத்துக்களை பரிபாலிக்க ரிஸீவரும், வரவு சிலவு கணக்குகளை சோதித்துப் பிசகுகளை கண்டுபிடிக்க கம்மிஷனரும், நியமிக்கச்செய்யலாம். தர்மகர்த்தா சொந்த உபயோகப்படுத்திய அல்லது நஷ்டமேற்படுத்திய தொகைகளை வசூலிக்கவும், தரும சொத்துக்களை சரியாய் விசாரணை செய்ய தகுந்த ஏற்பாடுகள் கண்டும் டிஸ்டிரிக்ட் கோர்ட்டார் தீர்மானிக்கலாம். இ. லா. ரி. 24. பம். 50. சோடாலால். வாதி. மனோஹர். பிரதிவாதி. I. L. R. 24. Bom. 50. Shotalal. v. Manohar.

---

## தர்மசொத்துக்களைப்பற்றி வழக்கிட பாத்தியஸ்தர்கள்.

48. தர்மகர்த்தாக்களின்பேரில் வியாச்சியம் செய்பவர்களுக்கு ஜாஸ்தியான பாத்தியங்களிருக்கவேண்டுமென்பது அவசியமில்லை. தேவாலயங்களுக்கு சுவாமி தரிசனஞ்செய்யப்போகும் பக்தர்களாகவாவது தேவாலயங்களுக்கு செய்யப்படும் உபயவரும்படிகளை அடைகிறவர்களாகவாவது இருந்தால் போதுமானது (இ. லா. ரி. 14. சென். 186. சுப்பய்யா வாதி. கிர்ஷ்ண பிரதிவாதி. I. L. R. 14. Mad. 186. Subbaiyya. v. Krishna

24. கல். 418. சாஜிடர்றஜாசவுடிரி. வாதி. கோர்மோகன்தாஸ் பெய்ஷ்னவ் பிரதிவாதி. I. L. R. 24. Cal. 418. Sajedur Raja shouderi v. Gour Mohundas Baishnov.

49. ஹிந்து சட்டங்களின்படி ஒரு இந்துவினுடைய வீட்டில் அவன் பூஜை செய்துவரும் தெய்வங்களுக்கும் இதர கோவில்களில் பொது ஜனங்களுக்காக ஏர்பட்டிருக்கிற தெய்வங்களுக்கும் எவ்வித வித்தியாசமுமில்லை. ஒரு இந்து தன்னுடைய சில சொத்துக்களை தன் வீட்டிலுள்ளதும் தான் பூஜை செய்தவந்ததுமான ஸ்வாமிகளின் பூஜை நைவேதனங்களுக்கு ஏற்பாடு செய்துவிட்டு இறந்துவிடுகிறான். அவன் வார்சுகளால் கொடுபடவேண்டிய அகூர்கள் சொந்த கடன்களுக்காக அந்த தர்ம சொத்துக்கள் ஏலவிற்பனை செய்யப்படுகின்றன. மற்ற பாகஸ்தர்கள் அந்த ஏலம் செல்லுபடியற்றதென்றும் அவை ரத்து செய்யப்படவேண்டுமென்றும் வழக்கிட்டு தீர்ப்புபெறலாம். அந்த ஏலம் ரத்து செய்யப்படுவதற்கு 3 வருஷங்களுக்குள் வழக்கிடவேண்டுமென்பதில்லை. பின்னிட்டும் வழக்கிடலாம். இ. லா. ரி. 9. பம். 169. நுபாஜகஷட். வாதி. கிருஷ்ணஜி கோவிந்தன். பிரதிவாதி. I. L. R. 9. Bom. 169. Rupajagashet. v. Krishnagi govindan.

50. தர்மகர்த்தாக்களின் பேரில் வியாச்சியந்தொடுப்பவர்கள். டிஸ்டிரிக்ட்கோர்டாரால் அனுமதிகொடுக்கப்படும் உத்திரவில் எந்தவிஷயங்கள் கண்டிருக்கிறதோ அதைப்பற்றி மட்டில் வழக்கிடலாமேயன்றி அதில் காணுத விஷயங்களைப்பற்றி வழக்கிடக்கூடாது. இ. லா. ரி. 21. பம். 257. சயாட்ஹஸ்ஸேன்மியன். வாதி. கேயிராகலெக்டர். பிரதிவாதி. I. L. R. 21. Bom. 257. Sayad Hussein Miyan. v. Collector of Kaira.

51. தேவஸ்தானம் கமிட்டி மெம்பர்களால் நியமிக்கப்பட்ட கோவில் மானேஜர்கள் அல்லது சூபரின்டெண்டுகள் கோவில்சொத்துக்களை அபகரித்தாலும், அல்லது அவர்களால் கோவில்களுக்கு நஷ்டமுண்டாக்கப்பட்டாலும், அவைகளைப்பற்றி அவர்கள் பேரில் வழக்கிடுவதற்கும் அவசியமானல் அவர்கள் தர்மசொத்துக்களில் பிரவேசிக்காதபடி கோர்ட்டு மூலாய் அவர்களுக்கு இன்ஜக்ஷன் கொடுப்பதற்கும் 1863ம் ஷுத்திய 20 வது ஆக்ட்படி நடவடிக்கை

நடத்தாமல் மற்ற சிவில் கேஸ்களைப்போல நடவடிக்கை நடத்தலாம. இ. லா. ரி. 9. கல். 133. புட்டலாப்றய். வாதி. றம்கோபால்சடர்ஜி. பிரதிவாதி. I. L. R. 9. Cal. 133. Puddalabh Roy v. Ram Gopal chatterji.

52. தேவாலய திருவாபரணங்களை உற்சவகாலங்களில் எடுத்து ஸ்வாமிகளுக்கு சாத்தச்செய்தல் பின்பு திருவாபரணங்களை களைந்து பந்தோபஸ்தாய் பெட்டிகளில்வைத்து காப்பாற்றச்செய்தல் அவ்விதம் சாத்துதல், களைதல் முதலியவைகளில் திருவாபரணங்களவு போனாலும் காணமற்போனாலும் அதனாலுண்டாகும் நஷ்டங்களை அவர்களிடம் வசூலித்தல் இவ்வித பாத்தியங்கள் தங்களுக்கிருப்பதாக தர்மகர்த்தாக்கள் பாத்தியஸ்தாபன வழக்குகள் திருவாபரணம் வைத்திருப்பவர்கள் பேரில் கொண்டுவருவார்களானால் அவ்வித வழக்குகள் பிடிக்க சிவில்புரிஸீஜர் கோடு 11-வது செக்ஷனும் இடங்கொடாது. (இ. லா. ரி. 5. பம். 80. வாசுதேவ் வாதி. வம்னஜி. பிரதிவாதி. I. L. R. 5. Bom. 80. Vasudev. v. Vamnaji.

---

## இன்னதர்மசொத்துக்களை கிரயம்பெற்றவர்களின்பேரில் வழக்கிட நியாயமில்லை என்பது.

53. 1817ம் வருஷத்திய 17-வது ரெகுலேஷன் சட்டத்துக்குப் பிந்தியும் 1863-ம் வருஷத்திய 20-வது ஆக்டுக்கு முந்தியும் தேவாலய தருமசொத்துக்கள் ஏற்பட்டு அவைகளை தர்மகர்த்தா கிரயமுதலிய பராதீனம் செய்வாரானால் அதைப்பற்றி கிரயம் வாங்கியவர்கள்பேரில் வழக்கிட நியாயமில்லை. தர்மகர்த்தாபேரில் வழக்கிட்டு ஏற்பட்ட நஷ்டமுதலியவற்றை அவரிடம் வசூலிக்கலாம். இ. லா. ரி. 22. சென்னை. 223. சிவய்யா. வாதி. ராமரேட்டி. பிரதிவாதி. I. L. R. 22. Mad. 223. Sivayya. v. Rama Reddi.

---

## குடும்பத்தில் ஏற்பட்ட தர்மங்களை நடத்தாத வார்சுகளின்பேரில்வழக்கிடலாமென்பதும், அவ்விதம் வழக்கிடபாத்தியஸ்தர்களும், அவ்வழக்குக்கு காலாவதி தோஷமில்லையென்பதும்.

54. ஒரு இந்து மதஸ்தன் தேவாலயங்கட்டி அதின் பூஜை நைவேதனங்களுக்கும், ஏழைகளுக்கு பிச்சையிடவும், பரதேசி யாத்

திரைவாசிகளுக்கு அன்னம் போடவும், சதாவிர்த்தி கொடுக்கவும், தகுந்த சொத்துகள் ஏற்படுத்தி அத்தருமங்கள் நடத்தத்தகுந்த தர்மகர்த்தாக்களும் நியமித்தார். அவருடைய வார்சுகள் தர்மசொத்துக்ளை கைக்கொண்டு தருமங்களை நடத்தாமல் விட்டுவிட்டார்கள். அதைப்பற்றி அத்தேவாலயத்தில் பூஜை செய்பவர் முதலானவர்கள், மேற்சொன்ன வார்சுகள்பேரில் சிவில் புரோசீஜர் கோடு 539-வது செக்ஷன்படி வழக்கிட்டதில், வாதிகள் வழக்கிட பாத்தியஸ்தர்கள் அல்லவென்றும் தாவா சொத்துக்கள் பொது தர்மசொத்துக்கள் அல்லவென்றும் தாவா காலாவதி தோஷத்தால் பாதிக்சப் பட்டிருக்கிறதென்றும் மேற்சொன்ன வார்சுகள் சுஷியாடினார்கள். மேற்படி தர்மசொத்துகளுக்கு பிரதிவாதிகள் தர்மகர்த்தாக்களாக நியமிக்கப்படாவிட்டாலும் தருமசொத்துக்களின் விசாரணையை அவர்கள் கைக்கொண்டதால் தர்மகர்த்தா ஸ்தானத்தில் அவர்கள் வைக்கப்பட்டிருக்கிறார்கள் என்றும், அவர்கள் தர்மகாரியங்களுக்கு விரோதஞ் செய்யும் ஒவ்வொரு தேதியினின்றும், டிஸ்டிரிக்ட் கோர்ட்டாருக்குஇஷ்டப்பட்ட எந்த காலத்திலும் வியாச்சியமூலம் உற்பத்தியாகிறபடியால் வாதிகளின் தாவாவுக்கு காலாவதி தோஷமில்லை யென்னும், தர்ம சொத்துக்கள் பொது தர்மங்களுக்கு ஏற்பட்டவைகளென்பது செய்யப்பட்டு வந்திருக்கும் தருமங்களினுலேயே ஸ்பஷ்டமாய் எற்படுகிறதென்றும், வாதிகளின் வழக்குப்படி தீர்ப்பு செய்யப்பட்டது. இ. லா. ரி. 23. பம். 659. ஜுகாலகிஷ்ஷோர் வாதி. லெகஷமண்டாஸ் பிரதிவாதி. I. L. R. 23. Bom. Jugalkeshore *v.* Lakshmandas.

55. தேவாலய முதலிய பொது தர்மசொத்துக்களின் விசாரணைக்கு ஏற்பட்ட தர்மகர்த்தாக்கள் மைனர் சொத்துக்களைப்பரிபாலிக்க ஏற்படும் கார்டியன் ஸ்தானத்திலிருக்கிறார்கள். அவர்கள் சொந்த செலவுகளுக்காக தர்மசொத்துகளை எவ்விதத்திலும்பாத்தியப்படுத்தக்கூடாது. அக்கடன்களுக்காக கடன்காரர்கள் தருமசொத்துக்களின்பேரில் நிறைவேற்றி தொகை வசூலிக்கக்கூடாது மெயின்ஸ் இந்துலா 5-வது பதிப்பு. செக். 308 Mayne's. Hindu Law 5th Edition section 308.

56. தர்மசொத்துகளை காப்பாற்ற வேண்டிய நிமித்தம் அல்லது சுவாமி பூஜை நைவேத்தியங்கள் முதலிய நிர்ப்பந்தமான சி

லவுகளுக்கு தர்மசொத்துகளை தர்மகர்த்தாக்கள் மைனர் கார்டியன் ஸ்தானத்தை வகித்து போக்கிய பெந்தகங்கள் வைத்து கடன் வாங்கி சிலவழிக்கலாம். மெ. இ. லா. 5-வது பதிப்பு. செக். 397. 2. இந்திபன் அப்பீல் 145. 14. பம். லா.ரி. பிரசன்னோ வாதி. குலால் பிரதிவாதி. 450. Maynes Hindu Law 5th Edition section 397. 2. I. A. 145. 14. B. L. R. 450. Prosinno *v.* Gulal பிரிவி கவுன்ஸில் 2 கல். 341. கன்வர் துர்க்நாத்றய் வாதி. இராமசந்திரசன் பிரதிவாதி 2. Cal. 341 P. C. Kunuuvar Durganath Roy *v.* Ramachanderson.

57. ஒரு தேவாலயத்துக்கு சில தர்மசொத்துக்கள் ஏற்பட்டிருக்கின்றன. அக்கோவில் தர்மகர்த்தா ஷை சொத்துக்களை ஒருவனிடம் குத்தகைக்கு கொடுத்து அக்குத்தகைத்தொகையை வசூலித்து தருமங்களை நடத்திவந்தார். பின்பு ஷை தர்மகர்த்தா தனக்குள்ள பாத்தியங்களை வேறொருவருக் கொடுத்து கோவிலுக்குச் சேரவேண்டிய குத்தகைத்தொகையை வசூலித்து சில தொகையைக் கொண்டு சில தருமங்கள் நடத்தும்படிக்கும் மற்றதை தன்னிடத்தில் கொடுத்து வரும்படிக்கும் ஒரு தஸ்தாவேஜி யேர்படுத்தினார். தர்மகர்த்தாவிடமிருந்து அதிகாரம் பெற்றவர் குத்தகைத்தொகை கிடைக்கவேண்டுமென்று குத்தகைதாரன்பேரில் வழக்கிட்டார். தரும சொத்துக்களை பராதீனஞ்செய்தது செல்லாதென்றும் வாதிவழக்கிட பாத்தியமில்லை யென்றும் குத்தகைதாரன் கக்ஷிபாடினான், மேற்சொன்ன தஸ்தாவேஜி பராதீனப்படுத்தினதாகமாட்டாதென்றும் அது அதிகார பத்திரமாக பாவிக்கப்படுமென்றும் வாதி வழக்கிட பாத்தியமுடையவனென்றும் தீர்ப்பு செய்யப்பட்டது. இ. லா. ரி. 16. சென். 73. கிருஷ்ணமாசார்லு வாதி. றெங்காசார்லுபிரதிவாதி. I. L. R. 16. Mad. 73. Krishnamacharlu *v.* Rengacharlu.

58. A என்ற வம்சபரம்பரையான தர்மகர்த்தா தனக்குள்ள தர்மகர்த்தாபாத்தியதைகளை B என்பவருக்கு பராதீனஞ்செய்து விடுகிறார். அந்த பராதீனத்தை முன்னிட்டு B என்பவனால் ஏற்பட்டகடன்களுக்காக தர்மசொத்துக்கள் எலம்போடப்படுகின்றன. A என்பவன் தான்செய்த பராதீனஞ் செல்லதக்கதில்லையெனவும் மேற்சொன்ன ஏலம் ரத்துசெய்யப்பட வேண்டுமென்று வழக்கிட்டு தீர்ப்பு பெறலாம். இ.லா.ரி. 15. சென். 389. சுப்பறயடு. வாதி. கோடாய்யா. பிரதிவாதி. I. L. R. 15. Mad. 389. Subbarayudu *v.* Kotayya.

58. A. என்ற வம்ச பரம்பரையான தர்மகர்த்தா தனக்குள்ள தர்மகர்த்தா பாத்தியதைகளை B. என்பவருக்கு பராதீனஞ்செய்தவிக்கிறார். அந்த பராதீனத்தை முன்னிட்டு B. என்பவனால் ஏற்பட்ட கடன்களுக்காக தர்மசொத்துக்கள் ஏலம் போடப்படுகின்றன. A. என்பவன் தான் செய்த பராதீனஞ் செல்லத்தக்கதில்லை. யெனவும் மேற்சொன்ன ஏலம் ரத்து செய்யப்படவேண்டுமென்றும் வழக்கிட்டு தீர்ப்பு பெறலாம். இ. லா. ரி. 15. சென். 389. சுப்பறாயுடு. வாதி. கோடய்யா. பிரதிவாதி. I. L. R. 15 Mad. 389. Subbarayudu v. Kotayya.

59. தேவஸ்தானம் கமிட்டியாருக்குள்பட்ட தேவாலய சொத்துகள் அல்லது அதன் வரும்படிகளைப்பற்றி வழக்கிடுவதாகவிருந்தால் அத்தேவாலயங்களுக்கு ஏற்பட்டிருக்கிற தர்மகர்த்தாக்கள் வழக்கிட பாத்திபஸ்தர்களேயன்றி தேவஸ்தானம் கமிட்டி மெம்பர்களுக்கு எவ்வித பாத்தியமுமில்லை. 1863ளு த்திய 20-வது ஆக்ட்டு 12 வது செக்ஷனில் சொல்லும் சொத்துக்கள் கவர்ண்மெண்டாரால் தேவஸ்தானம் கமிட்டி மெம்பர்களுக்கு நேரில் ஒப்புவிக்கப்பட்ட சொத்துகளேயன்றி மற்ற சொத்துகளைப்பற்றிச்சொன்னதல்ல. இ. லா. ரி. 17 சென். 143. சங்காமூர்த்தி.வாதி. சிதம்பரநாதன் பிரதிவாதி. I. L. R. Sankaramurthi v. Chidambaranadan.

60. A. என்பவன் சில சொத்துக்களை தருமங்களுக்கு ஏற்படுத்தி அவைகளை B. என்பவனும் அவன் வம்சஸ்தர்களும் வம்ச பரம்பரையாக தருமங்களை பரிபாலித்து வரவேண்டியதாக சன்னது ஏற்படுத்துகிறான். அச்சொத்துகளை B. என்பவனாவது அவன் வம்சஸ்தர்களாவது எவ்வித பராதீனமுஞ் செய்யக்கூடாது. அவர்கள்பேரில் ஏற்படும் டிக்கிரிக்கடன் முதலியனவற்றிற்கு அத்தரும சொத்துக்களை தொடர்ந்து தொகை வசூலிக்கக்கூடாது. அச்சொத்துக்களை எவன் பராதீனஞ் செய்கிறானோ அவன்மட்டில் அதைப்பற்றி ஆக்ஷேபிக்கக்கூடாதேயன்றி மற்ற பாகஸ்தர்கள் அவைகளை ரத்து செய்யலாம். பராதீனஞ் செய்பவன் தகப்பனாகவிருந்தாலும் பிள்ளைகள் அவைகளுக்கு கட்டுப்பட்டவர்களாகமாட்டார்கள். இ. லா. ரி. 15. பம். 625. ஸ்ரீகணேஷ்தர்மதர்மகறஜதர் வாதி. கேஷவறஙகோவிந்தகுல்காங்கர் பிரதிவாதி.

Sri Ganeshdarmedar maharajder V. Keshavrai Govind Kulgankar.

61. கோவில் சத்திரம் இவ்விரண்டு தருமங்களையும் நடத்த ஏற்பட்ட தர்மகர்த்தாக்கள் தருமங்களை நடத்தாமல் விட்டுவிடுவார்களானல் ஷை தர்மங்களை ஏற்படுத்தியவர்களின் வார்சுகள் அத்தர்மகர்த்தாவை விலக்கவும் ஏற்பட்ட நஷ்டங்களை வசூலிக்கவும் வழக்குத் தொடுக்கலாம். தர்மகர்த்தா தருமசொத்துக்களை மோசஞ்செய்த விபரங்களை தெளிவாக பிரியாதுகளில் காட்டினலல்லது பிரியாது தள்ளுபடி செய்யப்படும். அக்கேஸ்களில் வாதி. எதிரிக்கு நேரிடும் கோர்ட்டு சிலவுகளுக்கு ஜாமீன் கொடுக்கும்படி கட்டாயப்படுத்தப்படலாம். 6. கல். லா. ரி. 58. பிரஜோமோகன்டாஸ். வாதி. ஹாரோலாலடாஸ். பிரதிவாதி. 6 C. L. R. 58. Brojomohundoss *v.* Horrolalldas.

62. இந்துலாப்படி இந்துக்கள் தருமங்களை யேற்படுத்தினல் அதை பரிபாலிக்க தகுந்த தர்மகர்த்தாக்கள் நியமிக்கவேண்டுமென்பது அவசியமில்லை. தர்மம் என்பது எல்லோருக்கும் பொதுவானதே யன்றி இங்கிலீஷ் சட்டம்போல சிலவகுப்பாருக்குமட்டில் பாத்தியமானதல்ல. இந்துக்கள் எந்த கருத்துடன் எந்தெந்த தருமங்கள் எந்தெந்தவிதம் நடத்தப்படவேண்டுமென்று ஏற்படுத்தினர்களோ அந்தந்தப்படி தருமங்கள் நடந்துவருகிறதாவென்பதையும் அந்தப்படி நடத்தாத தர்மகர்த்தாக்களை நீக்கி தருமங்கள் ஏற்படுத்தியவர்களின் கருத்துப்படி நடத்திவரச்செய்யவும் இராஜாங்கத்தார்கள் கடமைப்பட்டவர்கள். அந்த கருத்துடன் தான் சி. பு. கோடு 539. வது செக்ஷன் ஏற்பட்டிருக்கிறது. இ. லா. ரி. 12. பம். 247. மனேஹர்கணேஷ்தம்பிக்கர் வாதி. லாக்மிறம்கோவின்டராம் பிரதிவாதி. I. L. R. 12. Bom. 247. Manohar Ganesh Tambikar *v.* Lakkmeeram Govindram.

63. ஒரு ஹிந்து ஒருதேவாலய பிரதிஷ்டைசெய்து அதன் பூஜை நைவேதனம் ஆராதனைகளுக்கு வேண்டிய சொத்துகள் ஏற்படுத்தியதுந்தவிர அன்னசத்திரமொன்று கட்டி அதில்தங்கும் அனதி ஏழை பரதேசிகளுக்கு சதாவர்த்தி கொடுத்துவரவும் ஏற்பாடு செய்கிருர், அவர் மிகுந்த புண்ணியஞ்செய்தவந்தபடியால் அவர் ஞாபகம் எப்போதுமிருக்கவேண்டியனிமித்தம் அரசர்க

ளால் ஏராளமான பூஸ்திதிகள் கொடுபட்டு தேவாலய சத்திரத ருமங்கள் விசேஷமாய் நடந்துவந்தன. அவர் சமாது செய்யப் பட்ட விடத்துக்கு அவரால் பிரதிஷ்டை செய்யப்பட்டஸ்வாமி வருஷப்பிரதிவருஷம் வந்து உற்சவங்கள் நடப்பதும் அவ்வினங் களுக்கு விசேஷ தொகை செலவழிக்கப்படுவதும் மாமூல் வழக்கமா ய் ஏற்பட்டிருந்தது. சில அரசர்கள் மேற்சொன்ன தர்மங்களுக்கு சில சொத்துகளை ஏற்படுத்தி அதன் வரும்படிகளில் பாதியை க்கொண்டு ஷை கோவில் சத்திர தருமங்கள் நடத்துகிறதென்று ம் மற்ற பாதி ஷை பெரியவரின் வம்சஸ்தர்கள் அடைகிறதென் றும் ஏற்பாடு செய்திருந்தார்கள். அந்தப்படி தர்மகர்த்தா வேலை ஒப்புக்கொண்டு பார்த்த ஷை பெரியவரின் வம்சஸ்தரொருவன் ஷை தர்மசொத்துக்களை பராதீனஞ்செய்தும் தர்மங்களை நடத்தா மலும் அவைகள் தன் சொந்த சொத்துக்கள்போல செலவழித்து ம்வந்தான். ஷை தருமங்கள் நடத்தப்பட வேணுமென்ற அக்கரை யுள்ள சிலர் ஷை தருமகர்த்தாவை விலக்கி வேறு தக்கவரை நி யமித்து தருமங்களை சரிவர நடத்திவரவேண்டுமென வழக்கிட்டா ர்கள். ஷை சொத்துகள் தனக்கு சொந்தமானவை யென்றும்தா ன் எச்செலவு செய்தபோதிலும் தன்னை யெவருங் கேட்க பாத்திய மில்லையெனவும் கக்ஷியாடினூர். அச்சொத்துகள் தர்ம சொத் துகள் எனவும் அவைகளை பராதீனஞ்செய்தது செல்லாதெனவு ம் அவைகளை பராதீனஞ் செய்ததற்காகவும் அவைகள் தன் சொ ந்த சொத்துகளென பாத்தியங்கொண்டாடினதற்காகவும் அத்த ர்மகர்த்தா தள்ளுபடி செய்யப்படவேண்டுமென்றும் அத்தருமங் கள் நடத்தப்படவேண்டியதில் கவலையுள்ள எவரும் வழக்கிட பாத்தியமுள்ளவர்களெனவும் தீர்ப்புசெய்யப்பட்டது. இ. லா. ரி. 15. பம். 612. சின்டாமன்பாஜாஜிதேவ் வாதி. தொண்டுகணேச தேவ். பிரதிவாதி. I. L. R. 15. Bom. 612. Chintaman Bajaji dev *v.* Dhondo Ganesh dev.

64. தர்மசொத்துக்களின் தர்மகர்த்தா பாத்தியதைகளைப்பற் றி இருவர்களுக்குள் வழக்கு நடந்துக்கொண்டிருக்கிறது. அத்தர்ம கர்த்தா ஸ்தானத்துக்கு அருகமெற்றவரென கண்டுபிடிக்கப்படுகிற ஒருவர் அத்தருமசொத்துக்களைக் காப்பாற்றுகிறதற்காவது வேறு தகுந்த காரணங்களுக்காவது கடன் வாங்குகிறூர். அக்கடன்களுக்

கு தர்மசொத்துகள் கட்டுப்பட்டவை. இ. லா. ரி. 18. செ ன்ஸ் 359. காஸிம்செய்பா வாதி. சுதீண்டாதீர்த்தசுவாமி பிரதி வாதி. I. L. R. 18. Mad. Kasim Saiba *v.* Sudhindra Thirtha swami.

65. தர்மசொத்துக்களை தர்மகர்த்தா சாஸ்வத அல்லது த ணிந்த பகுதி குத்தகை செய்யும்பட்சத்தில் அவருக்கு அடுத்த ப டியாக வரும் தர்மகர்த்தா அவைகளை ரத்து செய்யலாம். எவன் அவ்வித பகுதி குத்தகை செய்கிறானோ அவனைப்பற்றினமட்டில் அவைகள் கட்டுப்படுத்துமேயன்றி மற்றவர்களை எவ்விதத்திலும் கட் டுப்படுத்தமாட்டாது. இ. லா. ரி. 19. பம். 271. ரமச்சந்தி ராஸ்டிராவிட் வாதி. காஷிநாத் என். டிராவிட் பிரதிவாதி. I. L. R. 19. Bom. 271 Ramachandras Dravid *v.* Kashinath N. Dravid.

66. A என்பவன் ஒரு ஸ்வாமியைவைத்து பூஜை செய்து வருகிறான். அதற்கு அவனால் அநேக சொத்துகள் கொடுபட்டிரு க்கின்றன. A என்பவன் வார்சு B என்பவன் C என்றவனுக்கு ஷை ஸ்வாமியையும் அதற்கு ஏற்பட்ட சொத்துகளையும் கொடுத்துவிடு கிறான். A என்பவன் வார்சுகளில் ஒருவனாகிய D என்பவன் ஷை தர்மசொத்துகள் தனக்குக் கிடைக்கவேணுமென்றும் த ன்குடும்பத்திலிருந்த ஸ்வாமி கெட்டுப்போய்விட்டதால் வேறு ஸ் வாமி வைத்து பூஜை செய்துவருவதாகவும் வழக்கிட்டார். முன் பூ ஜிக்கபட்டுவந்த ஸ்வாமி பிரதிவாதியிடமிருந்து கிடைக்கவேண்டு மென்று வழக்கிடவில்லை. ஒரு விக்கிரகத்துக்கு இந்து சாஸ்திரங் களின்படி கும்பாபிஷேகமுதலிய கிரியைகள் செய்த பின் ஸ்வாமி அவ்விக்கிரகத்தில் இருப்பதாக எண்ணப்படவேண்டுமென்றும் அ தை வேறுவிக்கிரகங்களில் மாத்தக்கூடாதென்றும் ஷை விக்கிரக மும் கிடைக்கவேணுமென்று வழக்கு கொண்டுவராததினால் நிலம் மட்டில் கிடைக்க மாட்டாதென்றும் தீர்ப்பு செய்யப்பட்டது. 7. கல. லா. ரி. 278. துர்க்கா புரோஷட்டாஸ் வாதி. ஷியோபுரோ ஷட்பண்டா பிரதிவாதி. 7. C. L. R. 278. Doorga Bro shaddass *v.* SheoPoroshad Pandah.

67. ஒரு குடும்பத்தில் பூஜைசெய்துவந்த ஸ்வாமியையும்அ தற்கேற்பட்ட சொத்துகளையும் அக்குடும்பஸ்தர்களனைவருசேர்ந்து

மற்லொருகுடும்பஸ்தர்களுக்கு சொந்தமாயிருக்கிறார்கள். அதைப்பற்றி அவர்களின் வார்சுகள் வழக்கிடுவது செல்லமாட்டாது. இ. லா. ரி 17. கல். 557. க்ஷேட்டர்சண்டர்கோஸ் வாதி. ஹரிதாஸ்பண்டோபா ண்டியா பிரதிவாதி. I. L. R. Cal. 557. Khstterchander Ghose v. Haridas Pando Pandaya.

68. ஒரு தர்மகர்த்தாவை தள்ளுபடிசெய்து வேறு தக்கவர் களை நியமித்து தருமங்களை நடத்தவேண்டுமென்று ஒருவன் 1863 ஹுத்திய 20-வது ஆக்டு 18-வது செக்ஷன்படி அனுமதிபெறயிரு ன். அந்த அனுமதியுத்தரவின்பேரில் ஹைக்கோர்ட்டாருக்கு அப் பீல் செய்ய சட்டமில்லை. ஷை அனுமதிப்படி பிரியாது நடவடிக் கை நடத்தப்பட்டதில் ஷை ஆக்டு 20-வது செக்ஷன்படி ஷை கேஸ் மத்தியஸ்தரிடம் அனுப்பப்பட்டது. ஷை மத்தியஸ்தர்கள் ஷை சொத்துகள் பொது தர்மசொத்துகள் அல்லவென்றும் குடும்பத் தில் ஏற்பட்ட தருமசொத்துகள் (Private trust) என்றும் கண்டு பிடித்து அத்தருமங்கள் இன்னின்னவர்கள் இன்னின்னவிதம் நட த்திவருகிறதென்றும் தீர்ப்புசெய்தார்கள். அந்த தீர்ப்பைப்பற்றி ஹை க்கோர்ட்டுக்கு அப்பீல் செய்ததில் குடும்பதர்மசொத்துகளுக்கு 1863 ஹுத்திய 20வது ஆக்டுபடி நடவடிக்கை நடத்தக்கூடாதாகையா ல் ஷை தீர்ப்பு டிக்கிரிகளை ரத்து செய்துவிட்டார்கள். இ. லா. ரி. 19. கல. 275. ப்ரடாப்சண்டராமிஸ்ஸர் வாதி. பிரோஜா நாத்மிஸ்ஸர் பிரதிவாதி I. L. R. 19. Cal. 275. Prtap chandra Misser v. Broja Nath Misser.

69. ஒரு தக்க கனவான் தேவாலயதருமங்களுக்கு விசேஷ ஸ்திதி யேற்படுத்தி அதை பரிபாலிக்க தர்மகர்த்தா நியமிக்கிறான். அத்தர்மகர்த்தாவின் வம்சஸ்தர்கள் தருமங்களை சரியாய் நடத்தா மல் விட்டுவிட்டதுந்தவிர தர்மசொத்துகளை பராதீனங்கள் செய் து அவைகள் தங்களுடைய சொந்த சொத்துகளைப்போல நடத் திவந்தார்கள். மேற்சொன்னதர்மகர்த்தாக்களை விலக்கி வேறுதர்ம கர்த்தாக்கள் நியமித்து தருமங்களை யதாப்பிரகாரம் சரிவர நடத் திவரச்செய்யவேணுமென்று மேற்படி தருமங்களை யேற்படுத்திய வர்களின் வார்சுகள் வழக்கிட்டதில் ஷை தர்மசொத்துக்கள் ரெ வினியூ போர்ட்டாரவர்களுடைய விசாரணைக்குள்பட்டிராததினால்

வாதிகள் வழக்கிட பாத்தியஸ்தர்கள் அல்லவென்று ஷை தர்மகர்த்தா எதிர்க்ககூடியவர்கள். சி. பு. கோடு 539வது செக்ஷன்படி வாதி வழக்கிட பாத்தியமில்லாவிட்டாலும் 1863ஷ் ஆக்ட் 20வது ஆக்ட் 14-வது செக்ஷன்படி வழக்கிடலாமென்றும் காலியான தர்மகர்த்தா நியமனஞ்செய்ய வாதி பாத்தியமுடையவனெனவும் தீர்புசெய்சார்கள். இ. லா. ரி. 18 அல. 227 ஷியோரெத்னம் கன்வாரி வாதி. ரமபார்காஷ் பிரதிவாதி I. L. R. All. 227. Sheoratnam kannwari v. Rim Pargash.

70. தர்மகர்த்தா ஒருவன் இறந்துவிடுகிறான். தர்மசொத்துகளினின்றும் செருபட்ட கடன்தொகைகள் வசூலிக்கப்படவேண்டியிருக்கிறது. தர்மகர்த்தாவுக்கு தன் பெண்ஜாதியைத்தவிர வேறே வார்சுகளில்லை. ஷை கடன்களை வசூலிக்க வார்சு சர்டிபிகேட் பெறவேண்டியதில்லை. சர்டிபிகேட் வாங்கவேண்டுமென்கிற சட்டம் தர்மசொத்துக்களுக்கு ஏற்படவில்லை. இ. லா. ரி. 20. சென் 162. மல்லிகார்ஜுனா வாதி. ஸ்ரீ தேவம்மா பிரதிவாதி. I. L. R. 20 Mad. 162. Mallikarjuna v. Sridevamma.

71. பலவிடங்களில் யாஜித்து வாங்கிய தொகையைக்கொண்டு பூஸ்திதி முதலியன ஏற்பட்டு அதன் வரும்படிகளைக்கொண்டு தருமங்கள் நடந்துவந்தன. அத்தருமங்களை செய்யாமல் தர்மகர்த்தாவிட்டுவிடுவானானால் அவன்பேரில் 1863ம் ஷ ஆக்ட் 20-வது ஆக்ட்டு 14-வது செக்ஷன்படி வழக்கு தொடுக்கலாம். இ. லா. ரி. 19. அல. 104. முகமத்சிராஜுஹாக் வாதி. இமாம் உடீன் பிரதிவாதி. I. L. R. 19. All. 104. Muhammuhd SirajuHaq v. Imam uddin.

72. தேவஸ்தானங்களுக்கு ஏற்பட்ட தர்மகர்த்தாக்களை தகுந்த காரணமின்றி நீக்கக்கூடாது. இ. லா. ரி. 21 சென். 179. சேஷாத்திரி அய்யங்கார் வாதி. நடராஜ அய்யர் பிரதிவாதி. I. L. R. 21. Mad. 179. Seshadri Aiyangar v. Natarja aiyar.

73. ஒருவன் ஒரு தர்மகர்த்தாவின் தகாதசெய்கைகளைப் பற்றி 1863ஷ 20-வது ஆக்ட்டு 14-வது செக்ஷன்படி வழக்கிட்டு நல்ல எண்ணத்துடன் அவ்விஷயங்களைப்பற்றி பின்னால் வியா

ஜ்ஜியஞ்செய்துகொள்ள அனுமதியைக்கோரி பிரியாதை வாப்ஸ் வாங்கிக்கொள்ளுகிருன். அவன் வியாஜ்ஜியச்செலவு தர்மசொத்திலின்றும் கொடுபடவேண்டியதாக தீர்மானிக்கப்பட்டது. அவ்வுத்திரவைப்பற்றி அப்பீல் செய்வது செல்லாது. இ. லா. ரி. 21 சென். 421. இறமகிருஷ்ஷார் டாஸ்ஜி வாதி. ஸ்ரீ ரெங்காசார்லு பிரதிவாதி. I. L. R. 21 Mad 421 Ramakussoor Dossji *v.* Srirengacharlu.

74. ஒருவன் தன் வீடுகளை ஒரு கோவில் ஸ்வாமி பூஜை நைவேதனம் ஆராதனைகளுக்கு ஏர்படுத்தியதுந்தவிற அவ்வீட்டில் தன்பிள்ளைகள் வசிக்கிறதென்றும் உயில் எற்படுத்துகிருன். அந்த உயிலின் தாத்பரியம் தருமம் நடத்திடவேணுமென்ற கருத்தேயன்றி வேறல்ல. அத்தருமங்களை நடத்த அவன் பிள்ளைகள் கடமைப்பட்டவர்கள். இ. லா. ரி. 25. கல். 112. பூகோபட்டிபுரோசன்னோசன் வாதி. குருபுரோசன்னோசன் பிரதிவாதி. I. L. R. 25. Cal. 112. Bhuggobutty Prosonnosen *v.* Gooroo Prosonnoosen.

75. ஒரு கோவிலின் ஒரு தர்மகர்த்தா கோவில்சொத்துக்களை அபகரித்துக்கொண்டிருக்கிருன். ஷை கோவிலின் மற்றொரு தர்மகர்த்தா மேற்கண்டபடி அபகரித்தவனிடமிருந்து அபகரித்ததுகை முதலியனவற்றைப் பற்றி வழக்கிடுவதாயிருந்தால் டிஸ்டிரிக்ட் கோர்ட்டாரிடமிருந்து சாங்கிஷன் பெற்று நடவடிக்கை நடத்தவேண்டியதில்லை. இ. லா. ரி. 21. சென். 406. நெல்லியப்பிள்ளை வாதி. தங்கமநாச்சியார் பிரதிவாதி. I. L. 21. Mad. 406. Nelliappa Pillai *v.* Tangamanachiar.

76. தருமங்களை சரியாய் நடத்தாத தர்மகர்த்தாக்கள்பேரில் பக்தர்கள் வழக்கிடுவதற்கு சி. பு. கோடு 30-வது செக்ஷன்படி பப்ளிக் நோட்டீஸ் கொடுத்த பின்னிட்டுதான் தாவா செய்யவேண்டுமென்பதவசியமில்லை. அந்நோட்டீஸ் முன்னல் கொடுபடாததற்காக பிரியாதை தள்ளக்கூடாது. தாவாவுக்கு பிறகு அவ்வித அனுமதிபெறலாம். பிரியாதையும் அதன்படி திருத்திக்கொள்ளலாம். இ. லா. ரி. 23. சென். 28 சீனுவாசாசாரியார் வாதி. ரகவாசாரியார் பிரதிவாதி. I. L. 23. Mad. 28. Stenivasa chariar *v.* Ragava charriar.

77. ஒரு தேவாலய சொத்தை பரிபாலிக்க ஏற்பட்ட தர்மகர்த்தா தருமங்களை சரியாய் நடத்தாமல் விட்டுவிடுவாரானால் அத்தர்மகர்த்தா தேவாலய சொத்தை பரிபாலிக்கத் திறமையற்றவனென்றும் ஆனகயாலவரை நீக்கி வேறு தருஞ்சவர்களை நியமித்து தருமங்களை நடத்திவரவேண்டுமென்றும் பக்தர் ஒருவரும் ஷை சோவிலுக்கு பொது தர்மகர்த்தாவாயுள்ள ஒருவரும் சேர்ந்து 1863 ளூத்திய 20-வது ஆக்ட்டுபடிக்கும் சி. பு. கோடு 539-வது செக்ஷன்படிக்கும் டிஸ்டிரிகட் கோர்ட்டில் சாங்கிஷன் பெற்று நடவடிக்கை நடத்தினார்கள். அந்தப்படி நடத்தலாமென தீர்ப்பு செய்யப்பட்டது. இ. லா. ரி. 23. சென். 537. நாறயண அய்யர் வாதி. குமாரசாமிமுதலியார் பிரதிவாதி. I. L. R. 23. Mad. 537. Narayan Iyer v. Kunarasamy Muddaliar.

---

## மடங்களும் அவைகளின் சொத்துகளும்

78. நம்தேசத்தில் மடங்களுக்கு கொடுபெட்டிருக்கிற சொத்துகள், அன்னதானம் வித்திபாதானம், மடங்களில் சன்னியாசம் பெற்று சிஷ்யர்களாகி மடாதிபதிகளிடத்தில் சாஸ்திரோபதேசஞ் செய்து கொள்பவர்களை சம்ரக்ஷித்தல், அம்மடங்களுக்கு மாமூலாக ஏற்பட்ட தர்மங்களைச் செய்தல், இவைகளுக்கு ஏற்பட்டிருக்கின்றனவேயன்றி மடாதிபதிகள் தங்களுக்கு இஷ்டமான எந்த சொந்த செலவுகளுக்கும் செய்வதற்கும் ஏற்பட்டதல்ல.

---

## மடாதிபதிகளின் தகாதசெலவுகளுக்கு மடத்துச்சொத்துகள் கட்டுப்படாமை

79. மடத்துச்சொத்துகளை காப்பாற்றுவதற்கும், மடத்துக்கு ஏற்பட்ட தர்மங்களை செய்வதற்கும் வாங்கப்படும் அவசியமானகடன்களுக்குமட்டில் மடத்து சொத்துகள் கட்டுப்படக்கூடியதேயன்றி மடாதிபதிகள்பேரில் ஏற்படுகிற அல்லது அவர்களால் கொண்டுவரப்படுகிற எந்த வியாச்சியக்கடன்களுக்கும் மடத்துச்சொத்துகள் கட்டுப்படமாட்டா. இ. லா. ரி. 16. சென்னை. 67. சாமினாதன் வாதி. புருஷோத்தமன் பிரதிவாதி. I.L.R. Mad.67

Saminatha v. Purushottama ஷை 18 சென். 359. காசிம்சேய்பா வாதி. சுந்தரதீர்த்தஸ்வாமி பிரதிவாதி. I.L.R. 350. Kasin Saib v. Sundira Thirtha Swami.

80. ஒருமடத்துக்கு நீண்டகாலத்துக்கு முன் பூஸ்திதிகள் இனுமாக கொடுபட்டு வம்சபரம்பரையாக தர்மகர்த்தாக்கள் மடத்துக்கு ஏற்பட்டதருமங்களை நடத்திவந்தார்கள். இனும் செட்டில்மெண்டுநடந்த சென்ற 1866வூத்தில் மடத்து தருமங்களை தர்மகர்த்தாக்கள் வம்சபரம்பரையாக சரியாக நடத்திவருகிறவரையில், தீர்வை இனும் செய்யப்படுமென்பதாக பட்டாகொடுக்கப்பட்டது. அம்மடத்தை நல்லஸ்திதியில் வைத்தல் தேசாந்திரிகளுக்கு அன்னமளித்தல், பூஜை ஆராதனைகள் செய்தல், தண்ணீர்பந்தல் வைத்தல், தர்மகர்த்தா வம்சஸ்தர்களை சம்ரெக்ஷித்தல், இச்சிலவுகளுக்கு போதுமான தொகை சிலவழிக்கப்பட வேண்டுமென சில ரெவனியூ ரிகார்டுகள் ஏற்பட்டிருக்கின்றன. மடாதிபதி மடத்துச் சொத்தில் ஒரு கிராமத்தை தன் சகோதரருக்கு அத்தறுதி சாசனஞ்செய்து கொடுத்துவிடுகிறான் அச்சாசனம் பெற்றவன் அதை சிலகாலமனுபவித்து பிற்பட்டு அச்சொத்துக்களை அவன் விதந்து அடைகிறான். அச்சொத்துக்களை அவன் வேறொருவனுக்கு பெந்தகம் வைத்துவிடுகிறான். அந்த மடாதிபதி பினனும் சில நிலங்களை ஒருவனுக்கு சாஸ்வத குத்தகை செய்து கொடுத்துவிடுகிறான். மேற்சொன்ன சாசனம் ஏற்பட்டு 30 வருடங்களுக்குப் பிறகு மேற்சொன்ன மடாதிபதியின் மகன், ஷை சாசன சொத்துக்களும் சாஸ்வித குத்தகைக்கு விட்ட சொத்துக்களும் கிடைக்கவேண்டுமென வழக்கிட்டதில், வாதி தாவா காலாவதி தோஷத்தினுல் பாதிக்கப்பட்டுப் போய்விட்டதென்றும் தகப்பன் செய்துகொடுத்த சாசனத்தை பிள்ளை ஆக்ஷேபிப்பது செல்லாதென்றும் சாஸ்வித குத்தகை யேற்பட்ட நிலத்துக்கு வாதியே பட்டாகொடுத்திருப்பதால் அச்சொத்து வாதிக்குக் கிடைக்கத்தக்கதில்லை யென்றும் பிரதிவாதிகள் வக்ஷியாடினுர்கள். வாதிதாவாவுக்கு எவ்வித காலாவதி தோமு மில்லையென்றும், தருமங்கள் நடத்தப்படவேண்டிய தின்னதென்பதை ருஜிப்பிக்க மேற்சொன்ன ரெவனியூ ரிகார்டுகள் தகுந்த சாக்ஷியங்களென்றும், மேற்சொன்ன மடத்துத் தருமங்கள் எக்காலமும் சரிவர நடத்தப்படவேண்டியதற்காக தர்மகர்த்தாக்கள் ஏ

'றபடுத்தப்பட்டிருப்பதால் அச்சொத்துக்களை பராதீனஞ்செய்ய அவர்களுக்கு பாத்தியமில்லை யென்றும் ஷை விதந்து வாதி குடும்பஸ்தர்களில் ஒருவளாய்விட்டதால் அவளுடைய காலக்ஷேபத்துக்காக அவள் ஷை பராதீன சொத்துக்களை யனுபவிக்கக் கூடுமென்றும் அவள் ஜீவதிசைக்கு பிறகு அச்சொத்துக்களை வாதிபடையிறதெனறும் குத்தகை நிலத்துக்கு வாதி பட்டா கொடுத்திருந்தாலும் அந்த நிலத்தை வசப்படுத்திக்கொள்ள வாதி பாத்தியமுடையவனென்றும் தீர்ப்பு செய்யப்பட்டது. இ. லா. ரி. 18. சென் 266. சத்தியநாமபாரதி வாதி. சரவணபாகிஅம்மாள் பிரதிவாதி I. L. R. 18. Mad. 266 Sathianamabarathe v. Saravana bage Ammal.

81. ஒருமடாதிபதி மடத்துசிலவுகளுக்காக சிலதுகையும் மடாதிபதி பேரில் ஏற்பட்ட கிரிமனல் கேஸ் சிலவுகளுக்காக சிலதுகையும் கடன்வாங்கியிருந்தார், அந்தக்கடன் கொடுத்தவன் மடத்துச்சொத்து ஜவாப்தாரியின் பேரில் தனக்கு தொகை கிடைக்கவேணுமென்று வழக்கிட்டதில் அம்மடத்துச சொத்துக்களைக் காப்பாற்ற அக்கரையுள்ள சிலர் மேற்சொன்ன கிரிமனல் கேசுகளுக்கு வாங்கப்பட்ட கடனுக்கு மடத்துச் சொத்துக்கள் கட்டுப்படமாட்டாதென எதிர்கக்ஷியாடினார்கள். மடத்தின் பெருமையையும் மடாதிபதியின் மானத்தையும் காபாற்றுவதற்காக நல்ல எண்ணத்துடன் கடன் கொடுத்தேன் அதனால் அத்துகைக்கு மடத்து சொத்துக்கள் கட்டுப்படக்கூடியதென கக்ஷி சொன்னார் அவ்விதஞ்செய்ய மனுதர்ம சாஸ்திரமாவது சட்டாதாரமாவது இல்லாததினால் கிரிமனல் கேசுக்கு கொடுபட்டதுகைக்கு மடாதிபதியின் சரீர ஜவாப்தாரியின் பேரில் தீர்ப்பு செய்யப்பட்டது இ. லா. ரி. 25. அல. 396. பார்ஸோடமகர் வாதி. டட்கர் பிரதிவாதி. I. L. R. 25. All. 296. Parsotcamger v. Dutger.

82. மடாதிபதிகள் அந்தந்த ஆதீனங்களுக்கு ஏற்பட்ட மாமூல் வழக்கப்படி வார்சுகள் ஏற்படுத்தலாம். அம்மட சம்பந்தமான தருமங்களுக்கு தாராளமாய் சிலவுசெய்யலாம். அது விஷயமாகவாவது அத்தருமங்களின் சிலவுகளைப்பற்றியாவது எவரும் கேட்கப்பாத்தியமில்லை. அவர்கள் செய்யும் சிலவுகள் மடத்தின் சம்பந்

மான தருமங்களுக்கில்லாமல் வேறினங்களில் செலவழிக்கப் படமோயின் அதைப்பற்றி அம்மடத்து சிஷ்யர்கள் முதலான பாத்தியமுடையவர்கள் அவர்கள் பேரில் வழக்கிடலாம். இ. லா. ரி. 2. செ 175. சாமினாதபண்டாரம் வாதி. சேத்தப்பசெட்டி பிரதிவாதி' I. L. R. 2. Mad. 175. Samianatha Pandaram v. Settappachetty.

83. ஒருமடத்துக்கு ஏற்பட்ட தருமங்களை செய்வதற்கு பூஸ்திதிகள் கொடுபெட்டிருப்பதன்றி அனேக தேவாலயங்களின் பூஜைநைவேதனங்களுக்கும் வேண்டிய சொத்துக்கள் ஏற்பட்டிருக்கின்றதா அச்சொத்துக்களின் தர்மகர்த்தா பாத்தியங்களைப்பற்றி இருவர்களுக்குள் வழக்கு ஏற்படுகிறது. அவ்வழக்கிட அட்வொகேட் ஜெனரலிடம் (Advocate general) அனுமதி பெரவேண்டியதில்லை. சிவில் புரோஸீஜர் கோடு 539-வது செக்ஷன்படிக்காவது 1863ம் வருத்திய 20-வது ஆக்ட்பெடிக்காவது டிஸ்டிரிக்ட் கோர்ட்டில் வழக்கிடுவது செல்லாது மற்ற சாதாரண சிவில் கேஸ்களுக்கு ஏற்பட்ட கோர்ட்டுகளில்தான் வழக்கிடவேண்டும். இ. லா. ரி. 10. சென். 375. ஞானசம்பந்தபண்டார சன்னதி வாதி கந்தசாமி தம்பிரான் பிரதிவாதி I. L. R. 10. Mad. 375. Ghana sambanda pandarasannadi v. Kandasamy thambiran.

84. ஒருவன் தன் குருவுக்கு மடம் கட்டிக்கொடுத்து ஷை மடத்தில் அன்னதான முதலியனசெய்துவர அனேக சொத்துக்கள் கொடுக்கிறுன் அம்மடாதிபதி தருமங்களை சரியாய் நடத்தாமல் ஒழுங்கீனமான காரியங்களை செய்து வந்ததால் அம்மடத்துச் சொத்துக்கள் தனக்குகிடைக்கவேணுமென்று ஷை மடம் கட்டுவித்து தருமங்கள் ஏறபடுத்தியவர்களின் வார்சுகள் வழக்கிட்டதில் அவ்வழக்கு தள்ளுபடி செய்யப்பட்டது. பின்பு அம்மடாதிபதிபேரில் அதே விஷயத்தைப்பற்றியும் மற்றும் அம்மடாதிபதி செய்துவந்தால் பல அக்கிரமங்களைப்பற்றியும் அவரை நீக்கி தக்க யோக்கியதையுள்ளவர்களை நியமித்து தரு மங்களைநடத்திவரச்செய்யவேண்டுமென்று ஷை மடத்துதருமங்கள் ஏற்படுத்தியவர்களின் வம்சஸ்தர்கள் சப் கோர்ட்டில் வழக்கிட்டதில் அதே விஷயத்தைப்பற்றி விசாரித்து தீர்ப்பு ஏற்பட்டிருப்பதால் புனர் வியாஜ்ஜியஞ்செய்ய இடமில்லையென்றும் ஏற்கனவே விட்டுப்போன விஷயங்களைப்பற்றி வழக்குத்

தொடுக்க சி. பு. கோடு. 13, 43-வது செக்ஷன்களின்படி தடைசெய்யப்பட்டிருக்கிறார்களென்றும் சி. பு. கோடு. 539-வது செக்ஷன்படி சாங்கிஷன் பெராததினால் வியாஜ்ஜியம் நிற்க தகுந்ததில்லையெனவும் மடாதிபதி கக்ஷியாடினார் ஷை தர்மசொத்துக்கள் (Private trust) என்றும் அதனால் 1863ம் ஆுத்திய 20-வது ஆக்ட்டுப்படிக்காவது சி. பு. கோடு. 539-வது செக்ஷன்படிக்காவது சாங்கிஷன் பெரவேண்டுவது அவசியமில்லையெனவும் தருமங்கள் நடத்தபடாமல் நின்றுவிட்டதை மறுபடியும் நடத்தும்படி செய்யப்படவேண்டிய விஷயமாய் கொண்டுவரப்படும் வியாஜ்ஜியத்திற்கு காலாவதி தோஷமில்லையென்றும் சி. பு. கோடு. 13-வது 43-வது செக்ஷன்கள் இந்த வியாஜ்ஜியத்திற்கு எவ்வித தடையுஞ் செய்யமுடியாதென்றும் வாதி வேறு தர்மகர்த்தா நியமித்து தருமங்களை நடத்திவரக் கடமைப்பட்டவரென்றும் அந்தப்படி வேறு தர்மகர்த்தா நியமித்து தருமங்கள் நடத்தப்படாவிட்டால் தாவா தன்னுபடிசெய்யப்படுமென்றும் தீர்ப்பு செய்யப்பட்டது. இ. லா. ரி. 14 சென். 1. சாத்தப்பய்யர் வாதி. பெரியசாமி பிரதிவாதி. I. L. R. 14. Mad. 1. Sathappier *v.* Periasami.

---

## சத்திரதருமங்கள்.

85. ஆண்சந்ததியில்லாத ஒரு இந்து தனக்குள்ள பூஸ்திதிகளில் சிலதை பிராமணர்களுக்கு அன்னம்போடவும் சிலதை மனைவிக்கும் மற்றதை மனைவி எடுத்துகொள்ளும் ஸ்வீகார குமாரனுக்கும் கொடுக்கும்படிக்கும் அவன் இறக்குங்காலத்தில் வாய்மொழியாக மனைவிக்கு உத்திரவுசெய்தான். அவள் அந்தப்படி ஸ்வீகாரமெடுத்துக்கொண்டு செட்டில்மெண்டு பத்திரமும் ஏற்படுத்தினாள். ஸ்வீகாரபுத்திரன் தருமங்கள் யாதொன்றையும் நடத்தவில்லை. சில பிராமணர்கள் அதைப்பற்றி வழக்கிட்டதில் அவர்கள் வழக்கிட அருகமற்றவர்களென ஸ்வீகாரபுத்திரன் ஆக்ஷேபித்தான். பிராமணர்களுக்கு போஜனம் செய்விப்பதற்காக ஷை சொத்துக்கள் ஏற்பட்டிருப்பதால் எந்த பிராமணர்களும் வழக்கிட பாத்தியமுள்ளவனென்பதாக தீர்ப்பு செய்ததுந்தவிர ஸ்வீகாரபுத்திரன் தருமங்கள் யாதொன்றும் செய்யாததினாலே அந்த தருமசொத்துகளை லோகல்

பண்டுடிபார்ட்டுமெண்டாரிடம் ஒப்புவித்து அவர்களால் தருமம் நீ டத்தப்பட்டு வரும்படிக்கும் தீர்ப்புசெய்யப்பட்டிருக்கிறது. இ. லா. ரி. 21. சென். 10. ஞானபதி அய்யன் வாதி. சாவித்திரியம்மாள் பிரதிவாதி. I. L. R. 21. Mad. 10. Ganapathi Iyen v. Savuthiriammal.

86. சத்திர தருமங்கள் சரியாய் நடக்கப்படவில்லை யென வும் அதன் தர்மகர்த்தாவை நீக்கி வேறுதக்கவர்களை நியமித்து த ருமங்களை நடத்திவரவேண்டுமெனவும் கொண்டுவரப்படும் வழக் குகள் சி. பு. கோடு. 539-வது செக்ஷன்படி டிஸ்டிரிக்ட் கோ ர்ட்டாருடைய பரிசீலனைக்கு உள்பட்டதல்ல அச்சொத்துக்களைப் பற்றி சம்பந்தப்பட்ட சிவில் கோர்ட்டுகளில் தான் வழக்கிடவே ண்டும். இ. லா. ரி. 17. சென். 462. ரெங்கசாமிநாயக்கர் வா தி. வரதப்பநாயக்கர் பிரதிவாதி. I. L. R. 17 Mad. 462 Rangasamy Naiker. v. Varadappanaiker.

87. பம்பாய் ஹைகோர்ட்டார் இதற்கு நேர் விரோதமாக தீ ர்மானித்திருக்கிறார்கள் பொதுசத்திர தர்ம சொத்துக்களை பரிபாலி க்க நியமிக்கப்பட்டிருக்கும் தர்மகர்த்தாவிடமிருந்து அச்சத்திர வ ரும்படிகளுக்கு கணக்கு வாங்கி ஏற்பட்ட நஷ்டங்களை அவரிடம் வசூலிக்கவும் அவரை தர்மகர்த்தா பாத்தியதையினின்று விலக்க வும் வழக்கிடவேண்டியதிருந்தால் சி. பு. கோடு. 539—வது செ க்ஷன்படி டிஸ்டிரிக்ட் கோர்ட்டில் தான் வழக்கிடவேண்டும். இ. லா. ரி. 21. பம். 48. செய்துஉஸ்ஸேன்மேயின் வாதி. கேயிரா கலெக்டர். பிரதிவாதி. I. L. R. 21. Bom. 48. Sayad Hussinmain v. Collector of Kaira.

88. தர்மகர்த்தாக்களால் ஏற்படுத்தப்பட்ட சாஸ்விதப்பகுதி பாத்தியங்களை அவர்களுக்குப்பின் தர்மகர்த்தாஸ்தானம் வகிப்பவ வர்கள் ரத்து செய்யலாம் இ. லா. ரி. 19. பம். 271. ராம்சந்திர எஸ்டிராவிட் வாதி. காஷிநாத் எஸ். டிரேவிட் பிரதிவாதி. I. L. R. Ramchandra. S. Dravid v. Kashinath N. Dravid.

89. தர்மகர்த்தாக்களை விலக்கவேணுமென்று கொண்டுவரப்ப டுகிற வியாச்சியங்களில் அவர்களால் பராதீனஞ்செய்யப்பட்ட சொ

த்துகளை அனுபவிக்கிற அல்லது சாசனம் போக்கியம் முதலியன வாங்கிய நபர்களை சேர்க்கவேண்டுமென்பது அவசியமில்லை. இ. லா. ரி. 12 ·சென். 157. நரசிம்மா வாதி. அய்யன் பிரதிவாதி. I. L. R. 12 Mad. 157 Narasimmah v. Ayyan

90. லிமிடேஷன் ஆக்ட் 10-வது செக்ஷன்படி ஒரு சொத்து ஒருவரிடத்தில் குறிப்பிட்ட காரியத்துக்காக நம்பிக்கையாக கொடுபெட்டிருந்தால் அவைகள் கிடைக்கவேணுமென்று அவ்விதம் சொத்தை வைத்திருப்பவர்பேரிலாவது ·அவர் வார்சுகளின் பேரிலாவது அல்லது சரிபான பிரதிபிரயோஜனமின்றி அச்சொத்துக்களை பெற்றுக்கொண்டவர்கள்பேரிலாவது வழக்கிடுவதாகவிருந்தால் அதற்கு காலாவதி தோஷங்கிடையாது. இந்தசெக்ஷன் கருத்தின்படிதான் தருமசொத்துக்களைப்பற்றி வழக்கிடுவதற்கு காலாவதி தோஷமில்லையென யேற்பட்டிருக்கின்றன

---

## தர்மகர்த்தாக்களின்பேரில்வழக்கிட காலாவதிதோஷம்.

91. வம்சபரம்பரையான பாத்தியதைகளையுடைய தர்மகர்த்தாக்கள் 12 (பன்னிரண்டுவருஷங்களுக்கு மேற்பட்டு தங்கள் கடமைகளை செய்யாமல் விட்டுவிடுவார்களானால் அத்தர்மகர்த்தா வேலைபார்த்துவருபவர்கள்பேரில் அவர்கள் வழக்கிட காலாவதிதோஷத்தினுல் தடைப்படுத்தப்படுவார்கள். அவ்வழக்குகளைப்பற்றி ஷை தர்மசொத்துகளுள்ள சிவில் கோர்ட்டுகளில் வழக்கிடவேண்டுமேயன்றி டிஸ்டிரிக்ட்கோர்ட்டுகளில் வழக்கிடக்கூடாது. இ. லா. ரி. 23 சென். 271. ஞானசம்பந்த பண்டாரசன்னதி வாதி. வேலுபண்டாரம் பிரதிவாதி. I. L. 23. Mad. 271. Gnanasambanda pandara sannadi v. Velupandaram.

92. குறிப்பிட்ட ஒரு விஷயத்துக்காவது அல்லது குறிப்பிட்ட எந்த கருத்துடனுவது தருமங்கள் நடத்திவரப்பட ஒருவன் பூஸ்திதிகள் முதலியன எற்படுத்துகிறுன். அத்தருமங்களை நடத்திவர அவரால் எற்படுத்தப்பட்ட தர்மகர்த்தாவாவது அவருக்கு

பின்வார்சு பாத்தியம் அல்லது சட்டப்படி பாத்தியமுண்டயவர்களாவது ஏற்பட்ட தருமங்களை சரிவர நடத்தாமல் விட்டுவிடுவார்களானால் அத்தருமங்கள் ஏற்படுத்தியவர்களின் கருத்துகளின்படி எக்காலத்திலும் நடத்திவரத்தக்கதாக, இவ்வித வியாஜ்ஜியங்களுக்கு காலாவதி தோஷம் ஏற்படுத்தக்கூடாதென்ற கருத்துடன் லிமிடேஷன் ஆக்ட்டு 10-வது செக்ஷன் ஏற்பட்டிருக்கிறது. அத்தருமங்கள் நடத்திவரப்படவேண்டியதில் அக்கரையுள்ளவர்கள் எவரும் வியாஜஜியம் தொடுக்கலாம். இ. லா. ரி. 4. கல் 455. துர்கமோனி வாதி டோஸி பிரதிவாதி I. L. R. 4. Cal. 455. Doorgamoney *v.* Dossee.

93. தர்மசொத்துக்கள் சரியானபடி பரிபாலனஞ்செய்யப்படவில்லை அல்லது தர்மசொத்துக்களை தர்மகர்த்தா அபகரித்து வருகிறார் என்ற காரணங்களுக்காக அவரை தர்மகர்த்தாபாத்தியதையினின்று விலக்கவும தர்மசொத்துக்களை அவர் வசத்தினின்றுங் கைக்கொள்ளவும் வியாஜ்ஜியம் செய்வதாக இருந்தால் லிமிடேஷனக்ட்டு 10-வது செக்ஷன்படி காலாவதி தோஷமில்லை ஷை தர்மகர்த்தா பாத்தியம் தனக்கென்றும் மற்றவர்களுக்கில்லையென்றும் அச்சொத்துக்கள் தனக்கு கிடைக்கவேண்டுமென்றும் வழக்கிடுவதற்கு 12 வருஷகாலாவதிதோஷமுண்டு. இ. லா. ரி. 6. அல. 1. பி. க. பலவண்டராவ் வாதி. புரான்மால் பிரதிவாதி. I. L. R. All 1. P. C. Balwant Row *v.* Puranmal.

94. A என்பவன் சில தருமங்களுக்காக பூஸ்திதி யேற்படுத்துகிறான் B C என்பவர்கள் அத்தருமங்களை நடத்திவரதக்கதாக A என்பவன் தஸ்தாவேஜி யேற்படுத்திவிட்டு இறந்துவிடுகிறான் ஷை தர்மசொத்துக்களை D யென்பவன் கைப்பற்றிவிடுகிறான் ஷை சொத்துக்கள் தங்களுக்கு கிடைக்கவேணுமென்று B C இருவரும் D என்பவன்பேரில் வழக்கிட்டதில் தாவாகாலாவதி தோஷத்தால் பாதிக்கப்பட்டுப்போய்விட்டதாக தீர்ப்புசெய்துவிட்டார்கள். பின்பு சிலகாலங்கழித்து B. C. இருவரும் அட்வொகேட்ஜெனரல் (Advocate genaeral) இடம் சாங்கிஷன்பெற்று D யென்பவன் தருமங்களை நடத்தவில்லையென்றும் அவரை தருமகர்த்தாபாத்தியதையினின்றும் விலக்கி வேறு தகுந்த தர்மகர்த்தா நியமித்து

திருமங்கள் நடத்தவேண்டுமென்றும் D என்பவரால் ஏற்பட்ட ந ஷ்டங்கள் அவரிடம் வசூலிக்கப்படவேண்டுமென்றும் D என்பவர் பேரில் வழக்கு தொடுத்ததில் தாவா காலாவதிதோஷத்தினுல் பா திக்கப்பட்டுப்போய்விட்டதெனறும், சி. பு. கோடு. 13-வது செக் ஷன் டி வாதிகள் புனர் வியாஜ்ஜியஞ்செய்ய தடைபட்டிருக்கிறார் களென்றும், D என்பவர் க்ஷியாடினர் கோவிலுக்காக நடத்தும் நடபடிக்கைகளுக்கும் அட்வொகேட் ஜெனரலிடம் சாங்கிஷன் பெ ற்று நடத்தும நடபடிக்கைகளுக்கும் காலாவதி தோஷமில்லையென் றும் வாதிகள் வழக்கு செல்லுபடியுள்ளதெனவும் தீர்ப்பு செய்யப்பட் டது. இ. லா. ரி. 22. பம். 216. லக்ஷுமண்டாஸ் வாதி. ஜுகால்கிஷோர் பிரதிவாதி. I. L. R. Bom. Lakshmanadoss v. Jugalkishore.

95. கோவில் ஸ்தானிகர்களுக்கு கோவிலில் ஒருவித வரும்ப டி யேற்பட்டிருக்கிறது அவ்வரும்படிகளை 12 வருஷங்களுக்கு மேற் பட்டகாலமாய் வாங்காமல் விட்டுவிடுகிறார்கள் அவ்வரும்படிகளைப்பற் றி அந்தஸ்தானிகர் களாவது அவர்களின் வார்சுகளாவது பின்பு செ ய்யும் வழக்குகள் காலாவதி தோஷத்தினுல் பாதிக்கப்படும் இ. லா. ரி. 23. சென். 439. சிதம்பரசெட்டி, வாதி மீனம்மா. பிரதிவா தி. I. L. R. 23. Mad. 439. Chidamberachetty v. Minamma

---

## தர்மகர்த்தாக்கள்பேரில் வழக்கிட ஸ்டாம்பு பொருமானம்

96. ஒரு தர்மகர்த்தா தருமசொத்துகளை பராதீனங்கள் செ ய்வதுந்தவிர அச்சொத்துகள் தனக்கு சொந்தமுள்ளதெனச் சொ ல்வாரானுல் ஷை தர்ம சொத்துகளை அவர் பராதீனம் செய்தது செல்லுபடியற்றதெனவும் அவைகள் அவருடைய சொந்த சொத் துகள் அல்லவெனவும் பாத்தியஸ்தாபன வழக்குகள் எவரும் கொண் டுவரலாம். இதற்கு 10 ரூமாய், ஸ்டாம்பு போதுமானது இ. லா. ரி. 24. சென். 243. மகமட்ஜோபர் வாதி. மகமட்இப்ராகீம் பிரதிவாதி. I. L. R. 24. Mad. 243. Mahomed Joffer v. Mahomed, Ibrahim.

**97.** தர்மசொத்துகளின் வரவு சிலவு கணக்குகளை தர்மகர்த்தாக்கள் பக்தர்களுக்கு காட்ட கடமைப்பட்டவர்கள் இ. லா. ரி. **24.** சென். 232, 233. அண்ணுசாமி பிள்ளை வாதி. ரமகிருஷ்ண முதலி பிரதிவாதி. I. L. R. 24. Mad. 232, 233. Annasami Pillai *v.* Ramakrishna Mudali.

98. அக்கணக்குகளைக் காண்பிவிக்கத் தர்மகர்த்தாக்கள் ஆக்ஷேபித்தால் அதைப்பற்றி வழக்கிட 10 ரூ ஸ்டாம்பு போதுமானது. இ. லா. ரி. 2. பம் 219. மனேஹர் கணேஷ் வாதி. பாவாறமசந்திரடாஸ் பிரதிவாதி. I. L. R. 2. Bom. 219. Manoher Ganesh *v.* Bavaramachandras.

99. தர்மசொத்துகளை அபகரித்தல் முதலான தகாத செய்கைகளுக்காக தர்மகர்த்தாக்களை நீக்கவும் வரவு சிலவுகளுக்கு கணக்கு கேட்டு ஏற்பட்ட நஷ்டங்கள் அல்லது அபகரித்த துகைகளைப்பற்றி வசூலிக்கவும் 10 ரூபாய் ஸ்டாம்பில் வழக்கிடலாம் இ. லா. ரி. 21 அல. 200. கிரதாரிலால் வாதி. ராம்லால் பிரதிவாதி I. L. R. 21. All. 200. Girdhari Lal. *v.* Ramlal.

100. சத்திர தர்மசொத்துகளைப்பற்றி வழக்கிடுவதற்கு சென்னை ஹைகோர்ட்டார் சொத்தின் பொருமானத்துக்கு தக்கபடி ஸ்டாம்பு கட்டி வழக்கிடவேண்டுமென்று தீர்ப்பு செய்திருக்கிறார்கள் இ. லா. ரி. 17. சென். 62. ரெங்கசாமி நாயக்கன் வாதி. வரதப்பநாயக்கன் பிரதிவாதி. I. L. R. 17. Mad. 62. Rengasami Naiken *v.* Varadappanaiken.

101. தர்மசொத்துகளின் விசாரணையை நடத்திவருபவர் தருமகர்த்தா ஸ்தானத்துக்கு அருகமற்றவரென்றும் வேறு தர்மகர்த்தா நியமித்து தர்மங்கள் சரிவர நடத்தி வரப்படவேண்டு மென்றும் வழக்கிட 10 ரூபாய் ஸ்டாம்பு போதுமானது. பூராஸ்டாம்பு கட்டவேண்டுவதில்லை. புதிதாக நியமிக்கப்படும் தர்மகர்த்தா தருமசொத்துகள் தன் வசமாகவேண்டுமென்று தனிவழக்கிடலாம். இ. லா. ரி. 26. சென். 450. நேடிராமதாக்யாவும் இன்னும் சிலரும் வாதிகள். வெங்கிடாசாரிலும் இன்னும் சிலரும் பிரதிவாதிகள். I. L. R. 26. Mad. 450. Neti Rama Tagia and others *v.* Venkatacharlu and others.

102. 1863 ௵ 20-வது ஆக்ட்டு 14-வது செக்ஷன்படி நடபடிக்கை நடத்தவேண்டியதற்கு கோர்ட்டு பீஸ் ஆக்ட்டு 17-வது ஆர்டிகிள் 6-வது கிளாஸ்-டி பத்து ரூபாய் ஸ்டாம்பில் வழக்கிடலாம். இ. லா. ரி. 19. அல. 104. முகமத்ஸிராஜுல்ஹாக் வாதி. இமாம்உடீன் பிரதிவாதி. I. L R. 19. All. 104. Muhamed Sirajul Haq. v. Imam uddin. சி. பு. கோ. 539-வது செக்ஷன் டி வழக்கிடுவதற்கும் அந்த ஆர்டிகள் படி பத்து ரூபாய் ஸ்டாம்பில வழக்கிடலாம் இ. லா. ரி. 19. அல. 60. தக்குரி வதி. பிரமநரேயின் பிரதிவாதி. I. L. R. 19. All. 60. Thakuri v. Bramha Narain.

103. தர்மகர்த்தாக்களின்பேரில் பூராஸ்டாம்பு கட்டி வழக்கிட ஐவேஜியில்லாதவர்கள் பாபர்கள் என்று ஸ்தாபித்துக்கொண்டு ஸ்டாம்பு இல்லாமல் வியாச்சியம் செய்யலாம். இ. லா. ரி. 24. சென். 419 குருமூர்த்திசெட்டி வாதி கிருஷ்ணசாமிநாயக்கர் பிரதிவாதி. I. L. R. 24. Mad. 419. Gurumoorthy Chetty. v. Krishnasamy Naikar.

முற்றிற்று.

---

உ

சிவமயம்.

# விளம்பரம்.

"விவகாரபோதினி" என்னும் மாதாந்திர தமிழ் லா ஜர்னல் நாளது 1904 ௵ பிப்ரவரி மாதமுதல் புத்தக ரூபமாய் வெளிவரும். இதன் வருஷசந்தா ரூ 3—0—0. முன்பணம் அனுப்புவோர்களுக்கும் வி. பி. போஸ்டு மூலமாய் அனுப்பும்படி ஆர்டர் செய்பவர்களுக்கும் மாத்திரம் அனுப்பப்படும். தனிப்பிரதி 1-க்கு விலை அணா 6.

ஜனவரி மாதத்திய சஞ்சிகையில் பெந்தகம், ஒற்றி இவைகளின் விபரங்கள், வகுப்புகள், சுத்தபெந்தகம், கெடுவுடன்படிக்கைச் சாசனம் இவைகளில் ஏற்படவேண்டிய ஷரத்துகள், இவைகளின் வியாக்கியானங்களடங்கிய அனேக லாரிபோர்ட்டுகள், சென்ற டிசம்பர் மாசத்தில் ஏற்பட்ட எல்லா ஹைகோர்ட்டுகளுடைய இந்தியன் லாரிபோர்ட்டுகளின் சுருக்கங்கள், பொதுநன்மையை விளைவிக்கும் கேஸ்கள், ரெவினியூ சர்க்கியுலர் முதலியன வரையப்பட்டுள்ளது.

"இந்து குடும்ப கடன்கள்" விலை அணா 8. இதில் தகப்பனால் ஏற்பட்ட கடன்கள், பாராதீனங்கள் முதலியவைகளுக்கு அவனுடைய குமாரர்களும், ஒரு பாகஸ்தனால் ஏற்பட்ட கடன்கள், பாராதீனங்கள் முதலியவைகளுக்கு மற்ற பாகஸ்தர்களும், கார்டியன்களால் ஏற்படும் கடன்கள், பாராதீனங்கள் முதலியவைகளுக்கு மைனர்களும், விதந்து முதலான ஸ்திரீகளால் ஏற்படும் கடன்கள், பாராதீனங்கள் முதலியவைகளுக்கு அனந்தர வார்சுகளும் கட்டுப்படுதல், கட்டுப்படாமை, அவிபக்தகுடும்பத்தில ஜீவனும் சம்பெற பாத்தியமுள்ளவர்கள் முதலிய பல அரிய விஷயங்களும் அவைகளுக்கு ஆதாரமாயுள்ள லாரிபோர்ட்டுகளுடன் வரையப்பட்டுள்ளது.

இந்துதர்மகர்த்தா, இந்துகுடும்பக்கடன்கள் முதலான புஸ்தகங்கள் என்னுடைய பிரதான ஏஜண்டு (Sole Agents) மாயவரம் சினிவாஸ் அண்டு கம்பெனியாரிடத்திலும் அவர்கள் கமிஷன் ஏஜண்டுகளிடத்திலும் பெற்றுக்கொள்ளலாம்.